


NEW
RAMANA'S
சத்து மாவு

# தேவி அக்கா
# பாஸ்கர் அண்ணா
# காரைக்குடி சித்தி
# எல்லாரும்
# ஆரோக்கியத்துக்கு
# மாறிட்டாங்க..!

# நீங்க..?

NEW RAMANA'S
சத்து மாவு
ENERGY FLOUR

PROCCLAIM

குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியமாய் வாழவும், துடிப்புடன் செயல்படவும் தேவையான போஷாக்கு நிறைந்த சத்துமாவு, பதினைந்து வகையான தானியங்களின் சரியான கலவையான ரமணாஸ் சத்துமாவு. தினந்தோறும் விரும்பிய வகையில் உண்டு வந்தால் உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு குறைவேது.?

For queries - ramanasfoodproduct@yahoo.com, 94433 15689

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

10.9.2006







படம் : பொன்னாச்சி சுந்தரம்

# மாத நாவல்கள் மங்கிவிட்டது ஏன்?

ஜி. அசோகன்

இந்தக் கேள்வியே அபத்தமானது. முன்பு அதிக அளவுக்கு வந்ததைப்போல் தோன்றும். இப்போது குறைந்திருப்பதைப் போல் தோன்றுவதற்குக் காரணம், எப்படி வாசகர்களிடம் நாவல்களைக் கொண்டு சென்று சேர்க்க வேண்டும் என்ற அடிப்படை தெரியாமல் 'மளமள'வென பலர் பத்திரிகையை ஆரம்பித்ததுதான்.

மாத நாவல்களைப் போலவே எத்தனையோ வாரப் பத்திரிகைகள், மாதப் பத்திரிகைகள் நிறைய தோன்றி, பிறகு காணாமல் போய் இருக்கின்றன. அப்படியானால் வாரப் பத்திரிகையின் புகழ் மங்கிவிட்டது என்று அர்த்தமாகுமா? அந்தந்த பத்திரிகைக்கான வாசகர்கள் அப்படியேதான் இருக்கிறார்கள். எனது 'க்ரைம் நாவல்' பத்திரிகையைத் துவங்கிய காலத்திலிருந்து தொடர்ந்து படித்துக் கடிதம் எழுதும் வாசகர்கள் நிறைய பேர் உண்டு.

எங்களுக்கு உள்ள ஒரு சங்கடம், புதிய எழுத்தாளர்களின் நாவல்களை வெளியிட முடியாததுதான்! புதிய எழுத்தாளர்கள் நிறைய சிறுகதைகளை எழுதி ஓரளவுக்கு வாசகர்களுக்குப் பரிச்சயமானவர்களாக இருக்க வேண்டும். ஓரிரு தொடர்கதையாவது வெளியாகி இருக்க வேண்டும். இதை வாரப் பத்திரிகைகள்தான் செய்ய வேண்டும். முன்பு அந்தப் பணியை சாவி, மணியன், எஸ்.ஏ.பி போன்றோர் செய்து கொண்டிருந்தார்கள். பத்திரிகையின் நிறுவனரும் ஆசிரியரும் ஒருவராக இருந்தபோது நிறைய எழுத்தாளர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்பட்டது. தங்கள் பத்திரிகைக்கு இப்படிப்பட்ட எழுத்தாளர்கள் தேவை எனத் தேடிப் பிடித்து ஊக்கமளித்தார்கள். வாசகர்களின் மனத்தில் அவர்களைப் பதிய வைத்தார்கள். அப்படி உருவானவர்களை நாங்கள் பயன்படுத்த முடிந்தது. ஆனால் இப்போது ஆசிரியரும் ஒரு தொழிலாளியாக இருப்பதால், தங்களது பணியைச் செய்வதில் மட்டுமே கவனம் செலுத்துகிறார்கள். இதனால் எழுத்தாளனுக்கும் ஆசிரியனுக்குமான இடைவெளி அதிக

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

மாகிவிட்டது.

சிலர் சினிமா, தொலைக்காட்சி வருகை படிப் பார்வத்தை குறைத்துவிட்டதாகச் சொல்வதுண்டு. இதுவும் தவறு. இவை எல்லாம் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதவை. பயணங்களின்போதோ, காத்திருக்கும்போதோ புத்தகத்தைப் பயன்படுத்துவதுபோல் தொலைக்காட்சியைப் பயன்படுத்த முடியாது. ஆகவே படிப்பதற்கான நேரம் குறைந்துவிடவில்லை.

> "சினிமாவும் தொலைக்காட்சியும் படிப்பார்வத்தை குறைக்கவில்லை!"

இப்போது பெண் எழுத்தாளர்கள் நிறைய எழுதுகிறார்கள். அவற்றுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. அதற்குக் காரணம் சமூக நாவல்களில் சுலபமாக நிறைய பிரச்னைகளைக் கொண்டு வர முடிகிறது. க்ரைம் கதைகளை எழுத முன்பு போல் ஆட்களில்லை. அதனால் ஏற்கெனவே வெளியான நாவல்களையே மீண்டும் வாங்கி வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதற்கும் வரவேற்பு இருந்துகொண்டுதான் இருக்கிறது. இதழ் வருவதில் சற்றுத் தாமதமானாலும் நிறைய தொலைபேசிகள் வருகின்றன. ஒரு கல்லூரி மாணவி, புத்தகம் தாமதமாகும்போதெல்லாம் தொலைபேசி மூலம் விசாரிப்பார். துபாயில் உள்ள ஒரு வாசகர், ஊருக்கு வரும்போதெல்லாம் இங்கே வந்து நாவல்களை வாங்கிச் செல்கிறார்.

இப்போதும் நாவல்களை எழுதுவதற்கு நிறைய எழுத்தாளர்கள் தயாராக இருக்கிறார்கள். அவர்களைச் சரியாகப் பயன்படுத்தும் பத்திரிகையாளரோ, பத்திரிகை ஆசிரியரோ இல்லை. ஓர் எழுத்தாளரின் பெயரைச் சொன்னதுமே சட்டெனத் தெரிந்துகொள்ளும் ஆசிரியர்கள் இருக்க வேண்டும். அப்போதுதான் நிறைய எழுத்தாளர்கள் உருவாக முடியும்.

தொகுப்பு : கே.யுவராஜ்




**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர் : மு.மாறன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன், ச.கார்த்திகேயன்

தொலைபேசி : 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் : 044 - 2225 1021

மின்னஞ்சல் : ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.


இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

❒ எஸ். சந்திரமௌலி

கடந்த 1991–ல் நடந்த ராஜீவ் காந்தி படுகொலையில் முக்கிய குற்றவாளிகளாகத் தேடப்பட்ட சிவராசனும், சுபாவும் ஒரு டாங்கர் லாரி மூலமாக தமிழ்நாட்டிலிருந்து பெங்களூருக்குத் தப்பிச் சென்றார்கள். ஆகஸ்ட் முதல் தேதி அவர்கள் பெங்களூர் வந்து இறங்கியது முதல் 20-ஆம் தேதி சயனைடு சாப்பிட்டும், சுட்டுக் கொண்டும் இறந்தது வரையிலான விஷயத்தை அப்படியே திடுக்கிடும் காட்சிகளாகத் திரையில் கொடுத்திருக்கிறார் கன்னட இயக்குனரான ரமேஷ். படத்தின் பெயர்: சயனைடு. கன்னடத்தில் வெளியாகி வெற்றிகரமாக ஐம்பது நாட்களைத் தாண்டி ஓடிக் கொண்டிருக்கும் அந்தப் படம் தமிழில் மொழிமாற்றம் செய்யப்பட்டு விரைவில் ரிலீஸாகவிருக்கிறது.

# சிவராசன்... சுபா... ஒரு சயனைடு சினிமா!

CYANIDE



சென்னை திரைப்படக் கல்லூரியில் படித்தவர் இயக்குனர் ஏ.எம்.ஆர்.ரமேஷ் (வயது 37). அண்மையில் சென்னைக்கு வந்திருந்தவரைச் சந்தித்தோம்.

"ஸ்ரீபெரும்புதூரில் ராஜீவ் படுகொலை செய்யப்பட்டபோது நான் சென்னை திரைப்படக் கல்லூரியில் இறுதியாண்டு மாணவன். அன்றிரவு, சென்னை நகரின் பல்வேறு பகுதிகளுக்கும் சென்று மக்கள் ரியாக்ஷன் என்னவென்பதை நேரடியாகக் கண்டவன் நான். அப்போதே இதை வைத்து ஒரு படம் எடுக்க வேண்டும் என்று ஆசை" என்கிறார் ரமேஷ்.

**ஆனால், இந்தப் படுகொலையை மையமாக வைத்து எடுக்கப்பட்ட 'குற்றப் பத்திரிகை' படம் தடை செய்யப்பட்டு விட்டதே?**

"அதனால்தான் பெங்களூருக்கு சிவராசனும் சுபாவும் வந்த பிறகு என்ன நடந்தது என்பதை மட்டும் என் படத்தில் சொல்ல முடிவு செய்தேன். அந்த இருபது நாட்களில் அவர்களை முதலில் தங்கள் வீட்டில் தங்க வைத்து, அதன்பின் அவர்களுக்குத் தனி வீடு பார்த்துக் கொடுத்த ரங்கநாத் – மிருதுளா தம்பதியின் மன உளைச்சல், பயம் மற்றும் பெங்களூரில் நடந்த தேடுதல் வேட்டை, அதன் முடிவு ஆகியவற்றை மட்டும் நான் எடுத்துக் கொண்டேன்."

**கர்னாடக போலீஸ் தரப்பிலிருந்து பிரச்னை ஏதும் வந்ததா?**

"பெங்களூர் தேடுதல் வேட்டையில், முக்கிய பங்கு வகித்தவர், பெங்களூர் போலீஸ் உயரதிகாரியான கெம்பையா. அவரும் மற்ற போலீஸ் அதிகாரிகளும் ஏராளமான தகவல்களைத் தந்தார்கள். பத்திரிகைகளும் எனக்குக் கை கொடுத்தன. நான் ஏற்கெனவே குற்றப் பத்திரிகை படத்துக்கு நேர்ந்த கதியினை நன்கு அறிவேன். எனவே, படுகொலைக்கு நேரிடையாக சம்பந்தப்பட்ட விஷயங்களை எடுத்துக் கொள்ளாமல், பெங்களூர் எபிசோடை மட்டும் எடுத்துக் கொண்டேன். நான் இந்தப் படம் எடுக்க என் நண்பரான ரங்கனாத் முக்கிய காரணம்."

**என்னது... சிவராசன், சுபாவுக்கு புகலிடம் தந்த ரங்கனாத் உங்கள் நண்பரா?**

"ஆமாம், ரங்கனாத்தின் மனைவி மிருதுளாவை எனக்குச் சின்ன வயசிலிருந்தே தெரியும். கணவன்-மனைவி இருவரும் சிறப்புப் புலனாய்வுக்



• டைரக்டர் ரமேஷ்



குழுவால் கைது செய்யப்பட்டபோது எனக்கு பயங்கரமான ஷாக். மிருதுளா போலீசுக்குக் கொடுத்த தகவலின் அடிப்படையில் எடுக்கப்பட்ட அதிரடி நடவடிக்கையில்தான் சிவராசனும், சுபாவும் மற்ற புலிகளும் மரணமடைந்தார்கள். வழக்கு முடிந்தபின், ரங்கனாத்துக்குப் பத்தாண்டுகள் சிறை தண்டனை வழங்கப்பட்டது. தண்டனை முடிந்த பிறகு அவரைச் சந்தித்துப் பேசினேன். அதன் பிறகுதான் என் படத்துக்கு ஸ்கிரிப்டை எழுதினேன்."

**ரிஸ்க் எடுத்து இந்தப் படம் தயாரிக்க முன்வந்த தயாரிப்பாளர் யார்?**

## "ரொம்ப திருப்தி"

**'சயனைடு'** படத்தில் சுபாவாக நடித்த அனுபவம் பற்றி 'அண்ணி' மாளவிகாவிடம் கேட்டபோது உற்சாகமாகப் பேசினார். "எனக்கு இந்தப் படத்தில் நடிக்க வாய்ப்பு கிடைப்பதற்கு முக்கியக் காரணம் கேமராமேன் ரத்னவேலுதான். அவரும் டைரக்டர் ரமேஷும் என்னை அணுகி இந்தப் படம் பற்றிச் சொல்லி, முதலில் என்னை மிருதுளா ரோலில் நடிக்க வேண்டும் என்றுதான் கேட்டார்கள். படத்தில் மிருதுளா ரோலுக்கு முக்கியத்துவம் அதிகம் என்றாலும்கூட, நான் அதை விட, சுபா பாத்திரத்தில் நடிக்கவே விரும்புவதாகக் கூறினேன். அவர்களும் என் நடிப்பு ஆர்வத்தைப் புரிந்து கொண்டு, எனக்கு அந்த வாய்ப்பைக் கொடுத்தார்கள்."



'சுபா பாத்திரத்தின் மீது அப்படி என்ன ஓர் ஈர்ப்பு?'

"விடுதலைப்புலிகள் உட்பட பல்வேறு தீவிரவாத இயக்கங்கள் குறித்து எனக்கு மிகுந்த ஆர்வம் உண்டு. அவை குறித்து நான் நிறைய படித்திருக்கிறேன். பிரபாகரன் குறித்து நான் படித்த புத்தகங்கள் மூலம் அவரது கேரக்டரை எனக்குள் உருவகப்படுத்தி வைத்திருந்தேன். உண்மையில் சுபா ஒரு ஜாலியான பெண் என்று ரங்கனாத் மூலம் அறிந்துகொண்டேன். ஆனால், சுபாவின் உருவில் நான் என்னை பிரபாகரனாக நினைத்துக்கொண்டு படத்தில் நடித்தேன். திரையில் என் நடிப்பைப் பார்த்தபோது, மிகவும் திருப்தியாக இருந்தது" என்கிறார் மாளவிகா.

- கௌதம்ராம்

**படத்தில் சில கற்பனை விஷயங்களைச் சேர்த்திருக்கிறீர்கள் போலத் தோன்றுகிறதே?**

"இல்லவே இல்லை. படத்தில் கூறப்பட்டுள்ள, காட்டப்பட்டுள்ள அனைத்தும் நிஜம். சின்னச் சின்ன விஷயங்களைக்கூட ரங்கனாத்திடமிருந்து கேட்டு அறிந்துகொண்டு படத்தில் சேர்த்திருக்கிறேன். வீடு மாறுகிறபோது, கோயிலுக்குப் போய் விட்டு புது வீட்டுக்குப் போகலாம் என்று சுபா சொல்ல, எல்லோரும் ஒரு கோயிலுக்குப் போய்விட்டு, புதிய வீட்டுக்குப் போய் பால் காய்ச்சினார்கள். காலையில் வீட்டின் உள்ளே சுவரில் வாழை மரத்தின் தாரின் நிழல் விழுவதைப் பார்த்து, அதிர்ந்து, அபசகுனமாக இருக்கிறதே என்று சுபா சொல்வதுகூட கற்பனை இல்லை. டீவியில் ஒரு கன்னடப் படத்தில் இடம்பெற்ற சித்ரதுர்கா கோட்டையைப் பார்த்து விட்டு, வாய்ப்புக் கிடைத்தால் சுபா அங்கு போக விரும்பியது எல்லாமே நிஜம்."

**படத்துக்கு வரவேற்பு எப்படி இருக்கிறது?**

"இவ்வளவு நல்ல வரவேற்பு இருக்கும் என்று நான் எதிர் பார்க்கவில்லை. இந்தப் படத்தை பார்த்துவிட்டுப் பாராட்டிய டைரக்டர் ராம்கோபால் வர்மா, என்னுடைய இயக்கத்தில் இந்தியில் இந்தப் படத்தைத் தயாரிக்க முன்வந்திருக்கிறார்."

**அடுத்த படம்?**

"வீரப்பன் பற்றிப் ஒரு படம் எடுக்கும் திட்டமும் இருக்கிறது."

"இந்தப் படத்தின் ஸ்கிரிப்டுடன் நான் பல தயாரிப்பாளர்களை அணுகினேன். ஃபிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர், முதல் படம், ரிஸ்கான சப்ஜெக்ட் என்பதால் என்னை நம்பி முதலீடு செய்ய யாரும் முன்வரவில்லை. ஆனாலும் என் தீவிரம் குறையவில்லை. என்னுடன் படித்த கேமராமேன் ரத்னவேலு அளித்த ஊக்கத்தில் சில நண்பர்கள் ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட முன்வந்தார்கள். கடந்த டிசம்பர் மாதம் ஆரம்பித்து ஜனவரி பாதியில் படத்தை முடித்தோம்."

படங்கள் : **'சயனைடு' படத்திலிருந்து**

பித்ரு தோஷ நிவர்த்தி - பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில்

# மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில்

# அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத பலனைக் கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலன் ஒருசேர கிடைக்கும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.

★ ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் 6 மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.1001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் 1 வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு, ஸ்ரீராம் பப்ளிகேஷன்ஸ் வெளியீடான நித்ய பூஜைக்கு உதவிடும் தினசரி வழிபாட்டு ஸ்தோத்திரங்கள் புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.1001, ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட வெள்ளி டாலர், ஸ்வாமி படம் மஹாளயபக்ஷ அமாவாஸைக்குப் பின்னர் பிரஸாதத்துடன் அனுப்பி வைக்கப்படும்.

மஹாளய காலங்களில் பித்ரு லோகத்தில் உள்ள முன்னோர்களாகிய பூர்வ புருஷர்கள், யமதர்ம ராஜனின் அனுமதி பெற்று பூலோகத்திற்கு வந்து, தாமே விரும்பித் தம் சந்ததியினர் கொடுப்பதை முழுத் திருப்தியுடன் ஏற்றுக் கொள்வார்கள் என்று சாஸ்திரங்கள் கூறுவதால் வஸ்த்ர தானமும் செய்வது சிறப்பு. வஸ்த்ர தானம் செய்ய விரும்பும் அன்பர்கள் ஒரு வேஷ்டி, துண்டு, ஒரு புடவை, ரவிக்கைக்கான தொகை ரூ. 250 சேர்த்து ரூ. 751 அனுப்பினால் அவர்கள் சார்பாக அன்னதானம், வஸ்த்ரதானம் செய்து பிரஸாதம் அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனிதமான அன்னதான ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.



*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

M-11/F-4, RAGAM APTS., I AVENUE ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA

☎ : (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300, 94443 19300

மஹாளயபக்ஷ அமாவாஸைக்கு நேரில் வர விரும்புவர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.

**க**ங்கை - காவேரி இணைப்பு நிறைவேறியாச்சு!

கார்களில் வந்து இறங்கும் மேல் தட்டு மக்கள் மண்வெட்டுகின்றார்கள், மண் சுமக்கின்றார்கள்; ஊனமுற்ற முன்னாள் இராணுவ வீரர்கள் கையில் கடப்பாரையுடனும் மண்வெட்டியுடனும் மிகுந்த உத்வேகத்துடன் உழைக்கின்றார்கள்.

பிரதம மந்திரி, சாய்பாபா, காஞ்சி காமகோடிகள் அனைவரும் மண் சுமக்கின்றனர். வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் மண் வெட்டுகின்றனர்...

யெஸ்; பச்சை மனிதன் புத்தகத்துலதான் இந்தத் துணிச்சல் மிக்க கனவு மெய்ப்பட்டிருக்கு. (கொஞ்சம் அப்டேட் பண்ணி ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர், ஜக்கி வாசுதேவ், மாதா அம்ருதானந்தமயின்னு இந்த லிஸ்டை வளர்த்துக்கலாமோ?) 'புத்தகமா..? பச்சை மனிதன் சினிமாவாச்சே - அதுவும் தோத்துப் போன பிளான் ஆச்சே?' அப்படினு புருவத்தை உயர்த்திக் கேட்கறவங்களுக்கு இந்த நியூஸ் :

காவிரிப் பிரச்னையை மையமாக்கி பச்சை மனிதன் படம் எடுக்கற சரத் சூர்யாவோட முயற்சி போன வருஷம் பெய்த பெரு மழையால தடைப்பட்டுப் போச்சு. வீதி வீதியா யாத்திரை போய் மக்கள் கிட்டே நிதி சேர்த்து அப்படியே இந்த பிராப்ளம் பற்றிய விழிப்புணர்வையும் ஏற்படுத்தற முயற்சியைக் கைவிடும்படியாச்சு. இந்த கேப்ல சும்மா இருக்காம 'பச்சை மனிதன்' திரைக்கதையை ஐம்பது ரூபா விலையில அழகான புக்கா வெளியிட்டிருக்கார் ஷரத் சூர்யா. கிடைக்கற லாபம் திரைப்படத் தயாரிப்புக்குப் போகும். இந்தப் புத்தக ரிலீஸைக் கூட திருவாரூர் பகுதி கிராமத்துல, பசிக் கொடுமையால் செத்துப் போன ஒரு சிறுவனின் வீட்டில் அஞ்சலியாக நடத்தியிருக்காங்க. இந்த பிளான் ஜெயிக்க வாழ்த்துவோம்!

**ப**ச்சை மனிதன் ஹன்ட்ரட் பர்ஸன்ட் மனித நேயத்தை அஸ்திவாரமாக்கி எழுப்பப்பட்டிருக்கற கனவுச் சித்திரம். பட்

யதார்த்த உலகத்தைப் பார்த்தா இன்னும் ஆண்டான் - அடிமை காலத்துலதான் நாம் இருக்கிறாற்போலத் தெரியுது.

தமிழக அரசு கோ ஆப்டெக்ஸ் ஷோரூம்ல ஓணம் பண்டிகை விற்பனையாம். சேல்ஸ்மேன் ராஜா வேஷம் போட்டுக்கிட்டு வாடிக்கையாளர்களைக் கவர்ந்து




வாங்க வைக்கிறாராம்! (நீங்க புடைவையைத் தானே ரிவர்ஸ் பண்றீங்க.. நாங்க காலத்தையே ரிவர்ஸ் பண்ணுவோம்னு சவால் விடறாங்களோ?)

ஸ்ரீலங்கா பக்கம் எட்டிப் பார்த்தா நிலைமை இன்னும் தீவிரம்! சௌத் ஏஷியன் கேம்ஸ் கோப்பையை இந்தியா ஜெயிச்சது சந்தோஷம்தான். ஆனா அந்தக் கப்பை நடிகை யசோதா பல்லக்குல உட்கார்ந்து எடுத்துட்டுவர, ஆறு இளைஞர்கள் அந்தப் பல்லக்கைத் தூக்கிட்டு வர்றாப்போல ஏற்பாடு! அந்த போட்டோவைப் பார்த்தா சந்தோஷத்துக்குப் பதிலா ஷாக்தான் ஏற்படுது.

ரிலிஜியஸ் ஃபன்டமென்டலிஸம் பத்தி ரொம்பப் பேசறாங்கப்பா - ஆனா இந்த மாதிரி மாற்றுக் கருத்துக்கும் பரந்த சிந்தனைக்கும் இடமளிக்காத ஒரு சிந்தனைப் பிடிவாதம் எல்லா லெவல்லயும் நம்மளோட கலாசாரமாகவே மாறிட்டு வருது. இல்லாது போனால் 'பெரியார்' படத்துல குஷ்பு மணியம்மையா நடிக்கறதுக்கு ஆட்சேபனை எழுமா?

சூப்பர் மார்க்கெட்ல பாலிடிக்ஸ் பேசக்கூடாதுன்றதால இதோட நிறுத்திக்கிட்டு ஒரு பிளெஸண்ட் சப்ஜெக்டைப் பார்ப்போம். முதுமலை காட்டுப் பகுதியில யானைகளுக்கு இடம் போதலைன்னு தமிழ்நாடு கவர்ன்மென்ட் ஒரு நல்ல காரியம்

பண்ணப் போகுதாம். விவசாய பட்டா நிலங்களை வாங்கி, சரணாலயத்துல சேர்த்துக்கப் போகுதாம்.

மனித நேயம் இல்லாவிட்டாலும் மிருக நேயமாவது இருக்குப்பா - இன்னொரு உதாரணம் : கிளப் மஹிந்த்ரான்னு ஒரு ரிசார்ட் கம்பெனி. பொதுவா இது மாதிரி கம்பெனீஸ் சுற்றுச் சூழல் பத்தியெல்லாம் கவலைப்படறதில்லேன்றது தான் குற்றச்சாட்டு. கழிவுநீரை மலைச் சரிவுலயும் ஏரியிலயும் கலக்கவிட்டது ஒரு ரிசார்ட்னு வழக்குகூட வந்தது. பட் கிளப் மஹிந்த்ரா இஸ் டிஃபரன்ட் 'பாம்பே நேச்சுரல் ஹிஸ்டரி சொஸைடி' என்கிற

ரூபாய் வசூல் பண்ணுகிற முயற்சியில இறங்கியிருக்கு கிளப் மஹிந்த்ரா. சுற்றுலா போறவங்களைச் சுற்றுச் சூழல் பத்தியும் சிந்திக்க வைக்குது. இந்த டொனேஷனுக்கு ரசீதோடு கூட கஸ்டமர் தத்து எடுத்துக்கக் கூடிய ஒரு பறவை இனத்தின் லேமினேட்டட் ஃபோட்டோ அன்பளிப்பும் கிடைக்கும்!

அபூர்வ பறவை இனங்களைக் காக்கற அபூர்வ ஐடியாதான்.

பட் இலவச கலர் டீ.வி. இதர, இதர இலவச களேபரத்துல இந்த மாதிரி நல்ல காரியங்கள் கவனம் பெறாமலே போயிடுது.

மன்ற உறுப்பினர் பெங்களூர் சண்முகசுந்தரம் இலவசமா ஒரு ஜோக் அனுப்பியிருக்கார்; ஷேர் பண்ணிக்கறேன்:

# வெள்ளைக் கனவு!





இயற்கைப் பாதுகாப்பு அமைப்போட கை கோத்துக்கிட்டிருக்கு. உலகத்துல அழிவை எதிர்நோக்கற பறவை இனங்கள் ஏராளம். அதுல 324 வகை பறவைகள் ஏஷியாவிலேயே, மரண விளிம்பில் தொத்திக்கிட்டிருக்காம். இதுகளைப் பாதுகாக்கற முயற்சிக்கு உதவ, தன்னோட கஸ்டமர்ஸ் கிட்டேயிருந்து தலா மூந்நூறு




## சூப்பர் மார்க்கெட்

கர்னாடகா முதல்வர் மக்கள் குறை கேட்டுக் கொண்டிருந்தாராம். வயதான கிழவி ஒருத்தி "நான் உங்களுக்குத்தான்யா வோட்டுப் போட்டேன்" என்றாராம்.

முதல்வர் : ரொம்ப நன்றி. இப்போ என்ன வேணும் சொல்லுங்கம்மா...?

கிழவி : கலர் டீ.வி. வேணும்ங்க.

! ! ! ! ! ! !

# நிரூபிப்பாரா?

✉ இவ்வார ஜோக்ஸ் எட்டும், சிரிப்பை கொட்டோ கொட்டென்று கொட்டச் செய்தன!
**தொண்டி, மு.சுகாரா**

✉ 'தனிநபர் விமர்சனங்கள் சட்டமன்றத்தைக் கொச்சைப்படுத்துவதாகும் என்கிறாரே ஜெ..?'- வாசகரின் கேள்விக்குத் தராசுவின் பதில் நூற்றுக்கு நூறு உண்மை!
**திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி**

✉ திருமாவளவனின் பேட்டி சிறப்பாக இருந்தது. இப்படியே யார் பக்கமும் அதிகம் சாயாது தன் தனித்தன்மையை அவர் நிரூபிப்பாரா?
**நாகர்கோவில், ஆர்.குமாரசுப்பிரமணியன்**

✉ விராலி மலையில் மயில் சரணாலயம் அமைத்தால் நன்றாக இருக்கும். பிராணிகள் நல அமைப்பு கண்டுகொள்ளுமா?
**சென்னை - 40, நா.பாலசுப்பிரமணியன்**

✉ குழந்தைத் தொழிலாளர்களைத் தடுப்பதில் அரசு மட்டுமல்ல, வேலை கொடுக்கும் நிறுவனங்களின் முதலாளிகளும் ஒத்துழைப்புத் தரவேண்டுமென்பதை அழகாக உணர்த்தியது 'கனவு பலிக்கும்' பரிசுக் கதை.
**இராஜபாளையம், வே.ஈஸ்வரன்**

✉ 'கனவு பலிக்கும்' பரிசுக் கதையைப் படித்து மெய்சிலிர்த்துவிட்டேன்.
**சென்னை-66, ஆர்.கமால்பாஷா**

✉ கவிஞர் மு.மேத்தா இன்றைய தமிழ்க் கவிதையின் நிலையையும் இலக்கியத்தின் பாடு.
**திருநெல்வேலி, எஸ்.ஆழ்வான்.**

✉ சாதி மத பேதமின்றி எல்லோருக்கும் வேதம் சொல்லித்தரும் நம்பிள்ளை ராமானுஜாச்சாரியாரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.
**கும்பகோணம், கே.என்.பாலகிருஷ்ணன்**

✉ நவதிருப்பதி கோயில்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி அர்ச்சகர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். எல்லாக் கோயில்களிலும், திவ்யப் பிரபந்த பாராயணம், சாற்றுமுறை ஆகியன முறையாகச் சேவிக்கப்பட்டு வருகின்றன. இவை அனைத்தும் தொழிலதிபர் ஸ்ரீ வேணு சீனிவாசனின் ஏற்



✉ சாற்றாத முதலிகள் எனும் பிராமணரல்லாதாருக்கு, திருவரங்கம் கோயிலில் குறிப்பிட்ட சில முக்கியமான தொண்டுகள் (கைங்கர்யங்கள்) செய்யும் உரிமையை வழங்கியிருந்தார் ஸ்ரீராமானுஜர். அன்றிலிருந்து இன்றுவரை சாற்றாத முதலிகள், தங்களுக்கென்று அளிக்கப்பட்டுள்ள தொண்டுகளை, எந்தத் தடையுமின்றி தொடர்ந்து செய்து வருகின்றனர்.

அனைத்து வைணவத் திருக்கோயில்களிலும் பிராமணர் அல்லாதார் திவ்யப் பிரபந்தம் ஓதிக்கொண்டிருந்த நடைமுறை, திடீரென்று மறைந்துவிட்டது என்று கூறுவது சிறிதும் ஆதாரமற்றதாகும். 'நூற்றைம்பது பேர் திவ்யப்பிரபந்த பாராயணம் செய்த திருவல்லிக்கேணியில் இன்று ஆறு, ஏழுபேர்தான் இருக்கிறார்கள்; இருநூற்றைம்பது பாராயணக்காரர்

பாதையையும் மிகத் தெளிவாக எடுத்துரைத்துவிட்டார்!

**கோனாபேட்,**
**காவிரிமணாளன்**

✉ இசைக் கலைஞர்கள் இசையை ஒரு வேள்வியாக எண்ணி, தாமும் வாழ்ந்து, ரசிகர்களையும் மகிழ்விக்க வேண்டும். செய்வார்களா?

**சென்னை-91,**
**டி.என். பாலகிருஷ்ணன்**

✉ கவிராயர் உடுமலை நாராயண கவியின் சமூகப் பொது நோக்கினை யுகபாரதி நினைவுகூர்ந்த இன்பம் வெகு அலாதி!

**நெய்வேலி,**
**சாந்திசுந்தர்**

கள் இருந்த காஞ்சியில் இன்று இருபது பேர்கூட இல்லை' என்று கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது சரியல்ல.

**சென்னை-5,**
**எம்.ஏ.வேங்கடகிருஷ்ணன், ஆசிரியர், கீதாச்சார்யன்**

✉ ஸ்ரீமான் நம்பிள்ளை கூறிய கருத்துகள் ஒவ்வொன்றும் முன்னோர் மொழிந்த முறை தப்பியது - பின்னோர்ந்து தாமாகப் பேசியது. இயல்புக்கு மாறான பலவற்றைக் கூறிவிட்டு, இயல்பாக நடக்க வேண்டியது என்கிற நம்பிள்ளையின் கருத்தை இயல்பு மாறி கல்கி வெளியிட்டுவிட்டதா... இல்லை, கல்கியின் நோக்கமும் வேறா?

**புதுச்சேரி, க.கோசகன்**

✉ வேதம் அனைவருக்கும் பொது என்பதை என்னைப்போன்ற ஸ்ரீவைஷ்ணவ பெருமக்கள் தெரிந்துகொள்ள, கல்கி மிகவும் துணை நிற்கிறது.

**ஈரோடு, ஸ்ரீமான் ராம ராமாநுசதாசன்**




NARAYANA™
pearls & gems





For Exclusive Designs, Inexpensive Prices !

**KASI ARCADE**
Next to GRT Hotel, 116, Thyagaraya Road,
T.Nagar, Chennai – 17.Ph : 044-28153457 /5624

**ADYAR**
57, L.B. Road,
(Opp. Ganapathi Ram Theatre),
Chennai – 20.
Ph : 044 - 2446 2592

**FATHIMA PLAZA**
98, Pondy Bazaar,
T.Nagar,
Chennai – 17.
Ph : 044 - 2815 5094 / 3660

**NUNGAMBAKKAM**
G9 - ELDORADO BUILDING
N.H. Road,
Chennai – 34,
Ph : 044 - 5218 1463

**VADAPALANI**
1st Floor, RAAHAT PLAZA,
(Near Vadapalani Bus Terminus)
Arcot Road, Chennai – 26.
Ph : 044 - 5514 5092

❏ ப்ரியன்

**அண்மைக்காலமாக காங்கிரஸிடமும், தி.மு.க.விடமும் பா.ம.க.வுக்குச் சிறுசிறு மனஸ்தாபங்கள். நடிகை குஷ்புவிடமும் மீண்டும் பிரச்னை. இந்நிலையில் பா.ம.க. தலைவர் ஜி.கே. மணியைச் சந்தித்தோம்...**



**இட ஒதுக்கீடு விவகாரத்தில் தி.மு.க. இன்னமும் தீவிரமாகச் செயல்பட்டிருக்க வேண்டும் என்ற ரீதியில் டாக்டர் ராமதாஸ் அறிக்கை விட்டிருந்தார். இந்த விவகாரத்தில் இரு கட்சிகளுக்குள் விரிசல் இருக்கிறதா?**

"தி.மு.க., பா.ம.க இரண்டுமே சமூக நீதிக்காகப் போராடும் இயக்கங்கள். எனவே, எங்களுக்குள் எந்த முட்டலும் வராது; மோதலும் வராது. பிற்பட்டோர் மசோதா நீர்த்துப் போகும் வகையில் தயாரிக்கப்பட்டதற்கும், காலதாமதம் செய்யும் நோக்கில் நிலைக் குழுவுக்கு அனுப்பப்பட்டதற்கும் மருத்துவர் ஐயா தமது கவலையைத் தெரிவித்திருந்தார், அவ்வளவுதான். இரு இயக்கங்களும் இந்த விஷயத்தில் இணைந்து லட்சியத்தை அடையும்."

**இந்த விஷயத்தில் மத்திய அரசின் செயல்பாடு உங்களுக்குத் திருப்தியளிக்காவிடில், உங்கள் அமைச்சர்கள் ராஜினாமா செய்யலாமே!**

"மருத்துவர் ஐயாவும், அமைச்சர் அன்புமணியும் பலமுறை பிரதமரையும், சோனியாவையும் சந்தித்து, பிற்பட்டோருக்கு மட்டுமல்ல; சிறுபான்மையினருக்கும் இட ஒதுக்கீடு வேண்டும் என்று வலியுறுத்தியிருக்கிறார்கள். எங்கள் இயக்கப் போராட்ட வரலாறு அவர்களுக்கு நன்கு தெரியும். நாங்கள் ஒன்றும் புதிதாகக் கேட்கவில்லை. மண்டல் கமிஷன், வேலைவாய்ப்பில் மட்டுமல்லாமல், கல்வி நிறுவனங்களிலும் இட ஒதுக்கீடு கொடுக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. வேலைவாய்ப்பில் ஒதுக்கீட்டை அமல்படுத்தியதுபோல் கல்வி நிறுவனங்களிலும் செய்ய வேண்டும் என்பதுதான் எங்கள் கோரிக்கை. ஆனால் முடிவில் மெஜாரிட்டி நிலை வேறொன்றாக இருக்கும்போது, எங்களுக்குச் சங்கடமாகிறது. கூட்டணி ஆட்சியில் இது போன்ற சவால்களைச் சந்திக்க வேண்டிய அவசரமும், அவசியமும் உண்டாகின்றன. இருந்தும் நாங்கள் போராடுவோம்; விடமாட்டோம்."

"வேல்முருகன், குஷ்பு நடிக்கலாமா என்றதில் தவறே இல்லை!"

**இதே விவகாரத்தில் காங்கிரஸுடன் மோதல் தொடர்கிறதே?**

"சில குறிப்பிட்ட தலைவர்கள் இட ஒதுக்கீட்டுக்கு எதிராக இருக்கிறார்கள் என்று மருத்துவர் ஐயா சொன்னாரே தவிர, ஒட்டுமொத்த காங்கிரஸ் இயக்கத்தை அவர் குறை சொல்லவில்லை. பிரதமரும், சோனியாவும் எங்கள் கருத்துக்கு மிக்க வலு சேர்ப்பவர்களாகவே இருக்கிறார்கள்."

**சட்டசபை என்றாலே கூச்சல், கலாட்டா, வெளிநடப்பு என்றாகிவிட்டதே?**

"இதற்கு முற்றிலும் அ.தி.மு.க.தான் காரணம். அமைதியாக தங்கள் கருத்துகளைச் சொல்வதை விட்டுவிட்டு, மற்றவர்கள் பேசும்போது கூச்சல் போடுவது, இடையூறு செய்வது, நையாண்டி

செய்வது போன்ற செயல்களில் ஈடுபடுகிறார்கள். மற்றவர்கள் மனம் புண்படும்படியாக அவதூறு பேசுகிறார்கள். இத்தனைக்கும் அவர்களுக்குப் பேசுவதற்கு நிறைய வாய்ப்புக் கொடுக்கப்படுகிறது. ஜெயலலிதா கட்சியினர் ஒரு பொறுப்புள்ள எதிர்கட்சியாகச் செயல்படட்டும்."

**உங்களையும் காங்கிரஸையும் ஜால்ரா என்று அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் கிண்டல் செய்கிறார்களே!**

"இசைக் கச்சேரிகளைச் சிறப்பிக்கச் செய்வதில் ஜால்ராவின் பங்கும் உண்டு. இசைக் கச்சேரிகள் மனத்தைப் பண்படுத்தும், மனிதனைப் பக்குவப்படுத்தும். எனவே அதற்குப் பயன்படும் ஜால்ராவோடு எங்களை ஒப்பிட்டதைப் பற்றி நாங்கள் வருத்தப்படவில்லை. அ.தி.மு.க.வினரைப் போல் நாங்கள் அடிமைகளாக இல்லையே!"



# கலைஞர்... காங்கிரஸ்... குஷ்பு...

## – மனம் திறக்கிறார் ஜி.கே. மணி

**மீண்டும் குஷ்புவுடன் மோதுகிறீர்களே...?**

"எங்கள் உறுப்பினர் வேல்முருகன் சட்டமன்றத்தில் 'பெரியார் படத்தில் மணியம்மை வேடத்தில் குஷ்பு நடிக்கலாமா?' என்று கேட்டதில் என்ன தவறு? அரசாங்கம் 95 லட்ச ரூபாய் நிதியுதவி செய்யும் நிலையில், பெரியார் பாதையைப் பின்பற்றும் எங்கள் இயக்கத்தினர் அப்படி கேட்கத்தான் செய்வார்கள்."

**இலங்கைத் தமிழர் விவகாரத்தில் மத்திய அரசு செயலற்று இருப்பதாக நினைக்கிறீர்களா?**

"பாதிக்கப்பட்டிருக்கும் தமிழர்களுக்குத் தேவையான பொருள்கள், மருந்துகள், செஞ்சிலுவைச் சங்கம் மூலமாக வழங்கப்பட்டிருக்கின்றன. அமைதிப் பேச்சுவார்த்தை மீண்டும் துவங்க வேண்டும் என்று இந்தியா சொல்லியிருக்கிறது. அங்கே மோதலின் தீவிரமும் குறைந்திருக்கிறது."

**உள்ளாட்சித் தேர்தலில் இதே கூட்டணியில் தொடர்வீர்களா?**

"எங்கள் கூட்டணி அப்படியே தொடரும். எங்களிடையே நல்ல உறவு இருக்கிறது. பொதுமக்கள் கலைஞர் ஆட்சியில் திருப்தியுடன் இருப்பதால், நாங்கள் அமோக வெற்றி பெறுவோம்.

படம்: **ராஜன்**



# கல்கி



2006 செப்டெம்பர் 10
விய ஆவணி 25
மலர் : 65
இதழ் : 6

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## ஆட்சி மன்றங்களில் சுயநல வேள்வி!

**லோக்** சபாவின் தலைவர் சோம்நாத் சாட்டர்ஜி, சில மாதங்களுக்கு முன் வெறுத்துப்போய், தமது பொறுப்பிலிருந்து விலகிவிட விரும்புவதாக அறிவித்தார். அந்த அளவுக்கு அவை நடவடிக்கைகளை மலினப்படுத்தி எதிர்கட்சியினரும் ஆளுங் கட்சியினர் சிலரும் மோதிக் கொண்டார்கள். சோம்நாத் சாட்டர்ஜியிடம் சமாதானமாகப் பேசி ராஜினாமா குறித்த அவரது சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்தனர் எம்.பிக்கள். ஆனால் அவர்கள் கொஞ்சமேனும் திருந்தினார்களா என்றால், அதுதான் இல்லை!

எதிர்கட்சி எம்.பிக்கள் தொட்டதற்கெல்லாம் ஆட்சேபணை எழுப்புவது, வெளிநடப்பு செய்வது, ஆளுங்கட்சி எம்.பிக்கள் பலர் லல்லு பிரசாத் யாதவ்போல் பிறரை எடுத்தெறிந்து பேசுவது; இரு தரப்பிலும் ஒலிபெருக்கியை ஆயுதமாக மாற்றுவது என்று சகலவிதமான ஜனநாயக விரோத நடவடிக்கைகளும் நாடாளுமன்ற அவைகளில் தினமும் அரங்கேறிக் கொண்டிருக்கின்றன. நாடாளு மன்றம் மட்டுமின்றி சட்டசபைகளிலும் இதே கதிதான்.

இதற்கெல்லாம் என்ன காரணம்? தகுதியும் பண்பாடும் இல்லாத வர்கள், மக்கள் பிரதிநிதிகள் என்ற போர்வையில் நாடாளு மன்றத்திலும் சட்டசபையிலும் நுழைந்து, சுயநல வேள்வி வளர்க் கிறார்கள்! நாடாளுமன்ற, சட்டமன்ற நடவடிக்கைகள் மற்றும் செயல் பாடுகள் குறித்து வேண்டுமானால் பாடம் நடத்தலாம்; நேர்மை யையும் மனிதநேயத்தையும் பாடம் புகட்டி வரவழைக்க முடியாது.

மக்கள் பிரதிநிதிகளாகக் கருதப்படுவோர் நேர்மையையும் மரபு களையும் மதியாமல் தரக்குறைவாக நடந்துகொள்ளும்போது, அந்தச் சிந்தனைப் போக்கு சராசரி மக்களால் அப்படியே கவிகரிக் கப்படுகிறது. தலைவன் எவ்வழி, மக்கள் அவ்வழி! அனைத்து









நிலைகளுக்குமான சிந்தனைச் சீரழிவு, மேன்மை பொருந்திய நமது ஆட்சிமன்றங்களில்தான் ஆரம்பமாகிறது என்பது பெரும் சோகம்.

அரசியல் பின்புலம், அரசியல் பலம், அரசியல் செல்வாக்கு எனத் தங்களை வலிமைப்படுத்திக்கொண்டு கரங்களில் கறைபடிய அனுமதிக்கும் ஆட்சித் தலைவர்கள், அரசு இயந்திரத்தின் முக்கிய பிரதிநிதிகளான அதிகாரிகளையும் அவர்களுடைய அனுபவம் சார்ந்த கருத்துகளையும் மதிப்பதில்லை; பெரும்பாலும் ஏற்பதில்லை. இந்தப் போக்கு காரணமாகவும், அரசியல் நோக்கில் அதிகாரிகளைப் பந்தாடும் கொடுமை காரணமாகவும் பல அதிகாரிகள் அரசியல் தலைவர்களின் அடிவருடிகளாகவே மாறி வருகின்றனர்.

ஜனநாயகத்தின் இரு தூண்கள் இவ்வாறு ஆட்டம் கண்டிருக்க, மற்றொரு தூணான பத்திரிகை உலகம், வியாபார நோக்கு என்னும் வெள்ளத்தின் போக்கில் அடித்துச் செல்லப்பட்டுக் கொண்டிருக்கிறது. பிரச்னைகள் குறித்த அலசல், சமுதாயப் பார்வை, மக்கள் நலன் போன்றவை செய்தித்தாள்களிலும் பத்திரிகைகளிலும் அன்னியமாகிவிட்டன. அரசாங்கப் புறக்கணிப்புக்கு அஞ்சி அழுத்தமான தலையங்கங்கள் எழுதப்படுவதில்லை. யாரையும் பகைத்துக் கொள்ள விரும்பாமல் 'நமக்கேன் வம்பு' என்ற நிலைப்பாடுடன்கூட, மலினமான பரபரப்புச் செய்திகள், வக்ரங்களை விவரிப்பது என்று புரையோடிவிட்டது.

நீதித்துறையின் நடுநிலைமை குறித்து இன்னமும் நம்பிக்கைகொள்ள முடிகிறது என்றாலும் நீதி வழங்க மிகவும் தாமதமாகிறது; சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து யாரும் தப்ப முடிகிறது என்கிற நிலைமை நமது நம்பிக்கைக்குச் சவால் விடுகிறது. மேலும், நீதித் துறை தானாக முன்வந்து எதையும் சீர்செய்வது சாத்தியமில்லை. நீதிமன்றத்துக்கு வரக்கூடிய மனுக்களை மட்டும்தான் அத்துறை பரிசீலிக்க முடியும். ஒவ்வொரு பிரச்னைக்கும் நீதிமன்றம் செல்வது என்பதும் நடைமுறை சாத்தியமற்றது.

வருந்தத்தக்க இத்தகைய ஒட்டுமொத்தமான நிலைமை மாறி ஜனநாயகம் இங்கு அர்த்தமுள்ளதாக வலிமைபெற்று விளங்க வேண்டுமானால், அதற்கு வைத்தியம் சட்டமன்ற - நாடாளுமன்றத்தில்தான் தொடங்க வேண்டும். எதிர்கட்சி என்பது 'எதிரி' கட்சி அன்று; ஆட்சியாளருக்குச் சிறப்பான யோசனைகள் கூறி நல்லாட்சிக்கு வழி வகுப்பதும் எதிர்கட்சியின் பணி என்பது உணரப்பட வேண்டும்.

சட்டமன்ற தலைவர்களை ஒருங்கிணைத்து 'ஜனநாயகம் காப்போம்' என்ற அடிப்படையில் சோம்நாத் சாட்டர்ஜி செயல்பட்டால் நாட்டுக்குப் பெரும் பணியாற்றியவராவார். ○

இரவு உணவுக்காக சப்பாத்தி மாவைப் பிசைந்து கொண்டிருந்தாள் கமலா. அவள் மனதில் கவலையும், அதிர்ச்சியுமாக எண்ணங்கள் அலை மோதிக் கொண்டிருந்தன. "இப்படி ஒரு கல்லைத் தூக்கிப் போடுகிறாயே! ஆனாலும் உனக்கு கொழுப்பு ஜாஸ்திடி" என்றாள் தன் மகள் உஷாவைப் பார்த்து.

உஷா ஒரு கம்ப்யூட்டர் இன்ஜினியர். நகரத்தின் பிரபலமான கம்பெனியில் நல்ல வேலை.

உஷா தன்னுடன் வேலை செய்யும் நரேஷைக் காதலிக்கிறாள். நரேஷ் வேலை விஷயமாக வெளிநாடு செல்ல வேண்டி இருப்பதால் உடனடியாய் ரிஜிஸ்டர் திருமணம் செய்துகொள்ளலாம் என்கிறானாம். அவன் ஒரு அனாதை. சிறு வயதில் அனாதை இல்லத்தில் வளர்ந்து படித்து முன்னுக்கு வந்தவன்.

"உனக்கு பார்வதி பாட்டி பற்றித் தெரியுமில்லையா? அவங்க இதுக்கு சம்மதிக்கவே மாட்டாங்க உஷா. வீணா பிடிவாதம் பிடிக்காதே... நல்லதில்லை" என்றாள் கமலா. அவளது மனம் கடந்த காலத்தை நினைவு கூர்ந்தது. பார்வதிக்கு கணேஷ் ஒரே பிள்ளை. தூரத்துச் சொந்தமான கமலாவைக் கல்யாணம் செய்து வைத்தாள். வேலைக்குப் போகும் வழியில் லாரி மோதி ஸ்கூட்டரில் சென்று கொண்டிருந்த கணேஷ் உடல் சிதறி இறந்து போனான். வயிற்றில் ஆறுமாதக் கருவை சுமந்துகொண்டு, நிலை தடுமாறி நின்றாள் கமலா. பிறந்த வீட்டுக்காரர்கள் எங்கே பெண் விதவையாக வந்துவிடுவாளோ என்று தவிர்த்தார்கள். அப்போது பார்வதிதான் துணை நின்றாள். இன்ஷூரன்ஸ் பணத்தை வங்கியில் போட்டாள். பிறந்த பெண் குழந்தையை தங்கம் போல் வளர்த்தாள்.

இருபது வருடங்கள் ஓடிப்போனது. இப்போது உஷா வளர்ந்து ஆளாகி நிற்கிறாள். இதுவரை பாட்டி வீட்டை விட்டு எங்கும் போனது இல்லை. உஷா நல்ல நிலைக்கு வந்த பிறகுதான் முதன் முறையாக மும்பைக்கு உறவினர் வீட்டுக்குப் போனாள்.

போனவள் இரண்டு மாதங்கள் கழித்து வருவதாகத் திட்டம். அதற்குள் மும்பையில் பாழாப்போன குண்டுவெடிப்பு நிகழ்ச்சி நடந்துவிட்டது. மும்பை ரயிலில் பாட்டி இருந்தபோது வெடிகுண்டு வெடித்ததால் பாட்டி, உறவினர்கள் காயமடைந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்பட்டனர். நல்லவேளை, ஒரு வாரத்தில் பாட்டி வீடு திரும்பி விட்டாள். இருப்பினும் இரண்டு மூன்று மாதங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு நாளைதான் இங்கு வரப்போகிறாள்.

ஆசாரம் மிகுந்த தனது மாமியார் இந்தக் கல்யாணத்துக்கு நிச்சயம் சம்மதிக்க மாட்டார்கள்; கோபப்படுவார்கள். இந்தப் பெண் இப்படி வந்து சொல்கிறாளே, எப்படி இந்தப் பிரச்னையைத் தீர்ப்பது என்ற கவலையில் இரவு முழுவதும் கமலா தூங்கவே இல்லை.

காலையில் பார்வதி பாட்டி வந்து விட்டாள். ஆறுமாத கால பிரிவு. பேச எத்தனையோ விஷயங்கள்... பேசித் தீர்த்தார்கள். பாட்டியின் மடியில் ஆசையாக படுத்துக்கொண்டாள் உஷா. பேத்தியின் முகத்தை வருடியவாறு பாட்டி... "கமலா, நான் மும்பையில் இருந்தப்போ உஷாவுக்காக வரன் பார்த்தேன். பார்ப்பவர்கள் எல்லாம் 'ஆம்பளை இல்லாத வீடு... எப்படிக் கல்யாணம் செய்வார்களோ' என்று தயங்குகிறார்கள். என் ராசாத்திக்கு என்ன குறைச்சல்! கிளி போல இருக்கிறாள். கை நிறையச் சம்பளம்... யார் வரப்போகிறானோ தெரியவில்லை" என்றாள்.

விஷயத்தை எப்படி ஆரம்பிப்பது என்று யோசித்துக்கொண்டிருந்த உஷாவுக்குப் பழம் நழுவி பாலில் விழுந்த கதைபோல் ஆயிற்று.

"பாட்டி உங்ககிட்ட ஒரு விஷயம் சொல்லணும். உண்மையிலேயே நீங்க சொன்ன இராஜகுமாரன் தயாராக

அனுராதா சுந்தரம்

காத்துக் கொண்டிருக்கிறான். என்கூட வேலை பார்க்கிறார். பேர் நரேஷ். அம்மா-அப்பா யாரும் இல்லை. முக்கியமா என்னைத் திருமணம் செய்து கொண்டால் என் அம்மா, பாட்டி இருவரும் என்னோடுதான் இருப்பார்கள் என்று கண்டிஷன் போட்டதற்கு அவர் சரின்னுட்டார்.

பாட்டி... நீங்கள் நினைக்கிற மாதிரி இது இன்ஃபாச்சுவேஷன் இல்லை. ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்து கொண்டு இருக்கிறோம். உங்களது சம்மதம் தேவை'' என்று விஷயத்தை உடைத்தாள் உஷா.

அதற்குள் கமலா பதறியவாறு, ''அம்மா இந்தப் பையன் குலம், கோத்திரம் தெரியாது. சாதி, மதம் தெரியாது. இவன் என்னவோ உளறுகிறான். இந்தக் கல்யாணம் நடக்காது. நீங்கள் எந்த வீட்டிலும் ஒரு டம்ளர் தண்ணீர் கூட குடிக்க மாட்டீர்கள். உங்களிடம் போய்...'' என்று இழுத்தாள். அவளது உடல், கை, கால்கள் பதற்றத்தால் நடுங்கின.

ஒரு கணம் மௌனமாக இருந்த பார்வதி பாட்டி, வாயைத் திறந்து பேச ஆரம்பித்தாள். ''கமலா, நான் ரயிலில் பயணம் செய்த போதுதான் அந்த பயங்கர குண்டு வெடிப்பு நடந்தது. எனக்குத் தலையில் அடிபட்டு மயக்கமாகிவிட்டேன். அப்போது தக்க சமயத்தில் ஒருவர் என்னை ஆஸ்பத்திரியில் சேர்த்தார். இரத்தம் அதிகமாக வெளியேறிவிட்டது. எனக்கோ பி நெகட்டிவ். மிகவும் அரிய இரத்த குரூப். எங்கும் கிடைக்கவில்லை. அப்போது ஒருவர் வந்து இரத்தம் கொடுத்தாராம். அவர் பெயர் என்ன தெரியுமா? அப்துல் காதர்'' என்ற பாட்டி, ''இப்ப என் உடம்பில் எந்த ஜாதி இரத்தம் ஓடுகிறது சொல்'' என்றாள்.

''உனக்கும் கணேஷுக்கும் பத்துப் பொருத்தங்கள் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்தேன். ஒரு வருடம்கூட சந்தோஷமாக வாழவில்லை. ஜாதி, மதம், இனம் என்று பார்த்துப் பார்த்து அலுத்துவிட்டது. என் பேத்தி கெட்டிக்காரி. அவள் சரியாகத்தான் வாழ்க்கைத் துணையைத் தேர்வு செய்வாள். அதனால் அந்தப் பையனையே பேசி முடிக்கலாம்'' என்றாள் பாட்டி. ○

# என்ன சொல்லப் போகிறாள்?



# நிதிஷ் இந்தியாவின் பிரதமராகத் தகுதியானவர்!

## -லாலு பெருமிதம்

❒ முகில்

பாட்னா, செப்டெம்பர் 3. இந்தியாவின் நம்பர் ஒன் முதல்வர், பீகார் முதல்வர் நிதிஷ்குமார்தான் என டீ.வி. நிறுவனம் ஒன்று தம் கருத்துக் கணிப்பு முடிவுகளில் கூறியுள்ளது. அந்த இடத்துக்குத் தகுதியானவர்தான் நிதிஷ்குமார் என லாலு பிரசாத் யாதவ் பாராட்டி வரவேற்றுள்ளார்.



சமீபத்தில் மும்பையைச் சேர்ந்த தனியார் டீ.வி. சேனல் ஒன்று, தற்போது இந்திய மாநிலங்களை ஆட்சிசெய்யும் முதல்வர்களைப் பற்றிய பொதுமக்களின் கருத்துகளைப் பல்வேறு கோணங்களில் அலசி ஆராய்ந்தது. அதில் இந்தியாவின் நம்பர் ஒன் முதல்வராக நிதிஷ்குமார் பெயர் அறிவிக்கப்பட்டது.

இந்த முடிவுகளைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்த லாலு, தம் கட்சிக்காரர்கள் அனைவருக்கும் இனிப்புகள் வழங்கி மகிழ்ந்தார். அதன்பின் பத்திரிகையாளர்களுக்குப் பேட்டி கொடுத்தார். அதில் 'இந்தியாவின் நம்பர் ஒன் முதல்வர் எனப் பெயரெடுப்பதற்கு நிதிஷ்குமார் பட்ட பாடு கொஞ்சநஞ்சமல்ல. அவருடைய உழைக்கும் திறனுக்கும் சமூக அர்ப்பணிப்புக்கும், அவர் இந்தியாவின் நம்பர் ஒன் பிரதமராகவே வருவார். நாளந்தாவில் சமீபத்தில் பல விவசாயத் திட்டங்களை அறிமுகப்படுத்தினார். இப்படியெல்லாம் அறிவுபூர்வமாகத் திட்டங்கள் தீட்ட முடியுமா என்று நான் வாயடைத்துப் போனேன்.

பீகார் மக்கள், நிதிஷ்குமாரைத் தங்கள் முதல்வராகத் தேர்ந்தெடுத்ததன் மூலம் தாங்கள் அதிபுத்திசாலிகள் என்பதை மீண்டும் ஒருமுறை நிரூபித்துள்ளனர். விரைவில் இரண்டு லோக்சபா தொகுதிகளுக்கு இடைத்தேர்தல் நடக்கவிருக்கிறது. அதில் ராஷ்ட்ரிய ஜனதா தளம் கலந்துகொள்ளாது. நிதிஷ்குமாரின் சிறந்த ஆட்சிக்குச் செய்யும் மரியாதையாக நான் இந்த முடிவைக் கருதுகிறேன்.

விவசாயிகளுக்கு ஒரு லிட்டர் டீசலுக்கு ரூபாய் 10 மானியத்தை அரசு தரும் என நிதிஷ்குமார் தம் சுதந்திர தினப் பேச்சில் அறிவித்தார். அவர் இந்தப் பணத்துக்கு எங்கே போவார் என விளங்கவில்லை. எனவே எந்த உதவி வேண்டுமென்றாலும் நிதிஷ்குமார் என்னிடம் கேட்கலாம். நான் ரயில்வே துறையிலிருந்து ஒதுக்கிய நிதியை முடிந்தவரை எடுத்துத் தருகிறேன். எனக்கும் நிதிஷுக்கும் இடைப்பட்ட நட்பு சாகாவரம் பெற்றது.' இவ்வாறு லாலு பெருமிதப்பட்டார். ●

# நான் ஸ்டிக் என்றாலே மரக்கரண்டிகள் தானா ?

Unique 3 layer coating enables scratch resistance






இல்லை! இதோ வந்து விட்டது Premier Astral நான் ஸ்டிக் குக்வேர். மரக்கரண்டிகள் தான் உபயோகிக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை. 3 முறை கோட்டிங் செய்திருப்பதால் திடமான மேற்பூச்சு கொண்டது. ஸ்டீல் கரண்டிகளை தாராளமாக உபயோகிக்கலாம். கீறல் விழாது. நீடித்து உழைக்கும். அழகிய வடிவமைப்பு.

SS & premier are registered Trade Mark of S. Sivanesan &Co., Chennai, India.

**Premier**

*Astral* Non-Stick Scratch Resistant Cookware

---

Marketed by

**PREMIER MARKETING**

289, P. H. Road, Chennai - 600 007.

| CHENNAI | TRICHY | MADURAI | TIRUNELVELI |
|---|---|---|---|
| : 044-26420890 | Ph : 0431-2761355 | Ph : 0452-2632782 | Ph : 0462 - 2320740 |

# மெனோபாஸ்... கலவரம் எதற்கு?

❒ ஜெ. ராம்கி

புஷ்பாவுக்கு என்ன நேர்ந்ததென்று அவள் கணவருக்குப் புரியவில்லை. குழந்தைகளிடமும் தன்னிடமும் அன்பாக, ஆதரவாக இருந்தவள், இப்போது அடிக்கடி எரிந்து விழ ஆரம்பித்து விட்டாள்.

அன்றிரவு வேலைக்குப் போகும் தமது மகனிடமும் கல்லூரியில் படிக்கும் தமது மகளிடமும் மனைவியைப் பற்றி விவாதித்தார். மனநல மருத்துவரிடம் அழைத்துப்போக முடிவு செய்யப்பட்டது. புஷ்பாவிடம் டாக்டர் நிறைய கேள்விகள் கேட்டு ஆராய்ந்துவிட்டு,

'உங்கள் மனைவிக்கு இது மெனோபாஸ் நேரம். அதுதான் அவரது மாற்றத்துக்குக் காரணம். அவரை மகப்பேறு மருத்துவரிடம் கூட்டிச் செல்லுங்கள்' என்று சொல்லியிருக்கிறார்.

"மாதவிடாய் முற்றுப்பெறுகிற தருணத்தைத்தான் மெனோபாஸ் என்கிறோம். இக்கால கட்டத்தில் பெண்களுக்கு இயற்கையாகவே உடலளவிலும் மனதளவிலும் சில பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும். மெனோபாஸ் பொதுவாக 45 முதல் 50 வயதுக்குள் உண்டாகும். சினைப்பை செயல்திறனில் உண்டாகிற கோளாறு காரணமாக சிலருக்கு 35 வயதிலேயேகூட மெனோபாஸ் வரலாம். அதேபோல் சினைப்பையில் கட்டி, கர்ப்பப்பையில் கட்டி, கர்ப்பப்பையின் உள்வரி சவ்வில் புற்றுநோய், சவ்வின் வளர்ச்சி அதிகரித்தல் போன்ற காரணங்களால் 50 வயதுக்குப் பிறகும் மெனோபாஸ் வராமல் இருக்கலாம்" என்கிறார், பில்ராத் மருத்துவமனையைச் சார்ந்த மகப்பேறு மருத்துவ நிபுணர் தாட்சாயணி.

**மெனோபாஸை நெருங்கி விட்டோம் என்பதை எப்படித் தெரிந்துகொள்வது டாக்டர்?**

"40-45 வயதுக்குப் பிறகு மாதவிடாய் சுழற்சியில் திடீரென மாற்றம் உண்டாகும். மாதந்தோறும் தவறாமல் வந்துகொண்டிருந்த மாதவிடாய், இரண்டு மூன்று மாதங்களுக்கொரு

முறை என்று வந்து நின்றுபோகும். சில ருக்கு இருபது நாட்களுக்கொருமுறை அதிக ரத்தப்போக்கு வந்தும் நின்று போகும். மாதவிடாய் ஒரு வருடத்துக்கு மேல் வராவிட்டால் மெனோபாஸ் என்று உணர்ந்துகொள்ளலாம்."

**மெனோபாஸ் நேரத்தில் என்ன மாதிரியான சங்கடங்களை எதிர் கொள்ள நேரிடும்?**

" சின்ன விஷயங்களுக்கெல்லாம்கூட எரிச்சல் ஏற்பட்டு மனமுடைந்து போவர். திடீரென எடை கூடும், படபடப்பு இருக்கும். தூக்கமின்மையால் நிம்மதியிழப்பர். ஒரு சிலருக்கு மூச்சுத் திணறல்கூட ஏற்படுவதுண்டு. உடலிலிருந்து அதிக வியர்வை வெளியேறும். ஆஸ்டியோபீனியா என்கிற நோயால் எலும்புகளின் அடர்த்தி குறைந்துபோய் அதன் விளைவாக அடி முதுகு வலி, மூட்டு வலி ஏற்படும். இந்தச் சங்கடங்கள் தினமுமோ அல்லது அடிக்கடியோ இருக்கும்.

**சிலர் சீக்கிரமே மெனோபாஸ் நிலையை அடைந்து விடுகிறார்களே...**

"அப்படிப்பட்டவர்களுக்கு ஹார்மோன் சிகிச்சை மூலம் மாதவிடாயைத் தொடர வைக்கலாம். இவர்களுக்கு மெனோபாஸுக்குப் பிறகு உண்டாகும் எலும்பு பலவீனம், இதயநோய் உள்ளிட்டவை இளம் வயதிலேயே ஏற்படும் வாய்ப்புகள் அதிகம். மெனோபாஸ் சீக்கிரமே வந்தால், உடனே மருத்துவரை அணுக வேண்டும்."

**மெனோபாஸ் உண்டான பிறகு பரிசோதனைகள் ஏதேனும் தேவையா டாக்டர்?**

"கண்டிப்பாக! கர்ப்பப்பை சுருங்கியிருக்கிறதா அல்லது சராசரி அளவைவிட மாறியிருக்கிறதா என்பதைக் கண்டறிவதற்கான ஸ்கேன் செய்ய வேண்டும். கர்ப்பப்பையின் உள்வரி சவ்வின் அடர்த்தி எப்படியுள்ளது, சினைப்பையில் கட்டிகள் இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். கர்ப்பப்பையின் வாய்ப் பகுதிக்கான பாப்ஸ்மியர் சோதனை செய்ய வேண்டும்."

**மெனோபாஸை பெண்கள் எப்படி எதிர்கொள்ள வேண்டும்?**

"மெனோபாஸ் பெண்களுக்கு முதல் தேவை மனஉறுதி. இதுவும் வாழ்க்கையின் ஒரு பருவம் என்று சாதாரணமாக எடுத்துக்கொள்ள வேண்டும். கால்ஷியம் சார்ந்த உணவு வகைகளை அதிகம் சேர்த்துக்கொள்ள வேண்டும். தூக்கமின்மையால் அவதிப்பட்டால், மருத்துவர் ஆலோசனைப்படி பக்கவிளைவில்லாத மருந்துகளை எடுத்துக்கொள்ளலாம். சம்பந்தப்பட்ட பெண்களுக்கு குடும்பத்தினரின் ஆறுதலும் தைரியமும் மிகவும் அவசியம். மெனோபாஸுக்குப் பிறகு பெண்கள் அதிக அளவில் ஆளாவது ஆஸ்டியோபோரோசிஸ் எனப்படுகிற எலும்புசிதைவு நோய்க்குத்தான். எனவே, எலும்பு முறிவு ஏற்படா வண்ணம் கவனமாக இருக்க வேண்டும்."



• டாக்டர் தாட்சாயணி

**மெனோபாஸ் பெண்களுக்குத் தரப்படும் ஹார்மோன் ரீப்ளேஸ்மென்ட் சிகிச்சை குறித்து சர்ச்சை இருக்கிறதே...?**

"ஆமாம். ஈஸ்ட்ரோஜென் ஹார்மோனை மாத்திரை வடிவில் கொடுப்பதுதான் இந்தச் சிகிச்சை. இது தரப்படும்போது கர்ப்பப்பையின் உள்வரி சவ்வு தூண்டப்பட்டு, அதன் விளைவாக மார்பகப் புற்றுநோய் வர வாய்ப்பிருப்பதால், இப்போது Selective Estrogen Receptor Modulators என்னும் சிகிச்சையளிக்கப்படுகிறது. இச்சிகிச்சை பெண்ணின் கர்ப்பப்பையை பக்க விளைவுகளிலிருந்து காப்பாற்றுவதோடு, மெனோபாஸ் பாதிப்புகளிலிருந்து பெண்களுக்கு முழுமையான விடுதலையளிக்கிறது" என்கிறார் டாக்டர் தாட்சாயணி.

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**



# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை

அன்புடன் அழைக்கிறது

# அமரர் கல்கி பிறந்த நாள் விழா

செப்டெம்பர் 9, 2006,
(சனிக்கிழமை)
மாலை 6:00 மணி

பாரதிய வித்யாபவன் அரங்கம்,
மயிலாப்பூர், சென்னை - 600 004

இளம் இசைக் கலைஞர்கள்
**செல்வி. சவிதா நரசிம்மன்,**
**திரு. ஜே.வைத்தியநாதன்**
ஆகியோருக்கு விருதுப் பத்திரங்கள் வாசித்தளித்து
அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவுப் பரிசுகளை வழங்குதல்

தலைமை :
ஹிந்து பத்திரிகை நிறுவனத்தின் நிர்வாக இயக்குனரும்
மியூஸிக் அகாடமி தலைவருமான **திரு. என். முரளி**

மாலை 6:45 மணி : **இன்னிசைக் கச்சேரி**

| | | |
|---|---|---|
| சவிதா நரசிம்மன் | : | பாட்டு |
| உஷா ராஜகோபாலன் | : | வயலின் |
| ஜே. வைத்தியநாதன் | : | மிருதங்கம் |
| குருபிரசாத் | : | கடம் |

**அனைவரும் வருக!**



குறைந்தபட்சம்
மூன்று வருடம்
கூடஇருந்து பழகி
ஒருவாறு புரிந்துகொண்டபோது
பிரிந்துவிடுவர் நண்பர்

ஊர் பழகி அக்கம் பக்கம்
நட்பாகும் வேளை
வரும் மாற்றல் உத்தரவு

கடை கடையாய் ஏறி
தேர்ந்தெடுத்த
திரைச்சீலைகள் மாட்டி
தொட்டிகள் வாங்கி
மதர்ப்புடன் வளர்ந்த
மல்லிகையைப் பார்த்து
முறுவலிப்பதற்குள் வந்துவிடும்
இன்னொரு வீடுதேடும் நேரம்

உள்வேலை ஒழிந்து
கைதுடைத்து
உட்காரும் நேரம்
தொலைக்காட்சியில்
கடைசி நிகழ்ச்சி

வீடு இடிகிறது நாடு எரிகிறது
உடன்பிறந்தவர்களுடனாவது
ஒருமித்திருப்போமென
பிடிப்பு ஏற்படும் சமயம்
முடிந்துவிடும் வாழ்க்கை

# ரணம்...

ஜோத்ஸ்னா

# வேறெதுவும் வேண்டாம்!

4

## நேற்றைய காற்று!

## திரையிசைத் தெம்மாங்கு தொடர்

**பா**டல், திரைப்படச் சந்தையில் விற்கும் பொருளன்று; சிந்தனைக் குடுவையில் நிரப்பப்படும் அரிய லேகியம். ஒரு சூழலுக்கான பாடலை எழுதுகிறபோது அந்தச் சூழலை நூறு சதவிகிதம் உள்வாங்கிக் கொண்டு எழுதாவிட்டால் பாட்டின் தரம் மட்டுமன்று, பண்பாட்டின் தரமும் கீழிறங்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அதற்கான உதாரணங்களைப் பல பாடல்கள் கொண்டிருப்பதை நீங்களே அறிவீர்கள்.

தனக்கே திருப்தி வராத படைப்பை, எப்படியாவது விற்றுப் பொருளீட்டும் பணியை நிச்சயமாக ஒரு படைப்பாளன் செய்ய மாட்டான். திருப்தி என்பது படைப்பின் திருப்தி அன்று; படைப்பாளன் தான் கொண்டிருந்த நம்பிக்கை மீது வருகிற திருப்தி. ஒரு முறை பீம்சிங் படத்துக்குப் பாடல் எழுதப்போய் நினைத்தது போல சிறப்பாக அமையாத நிலையில் 'அப்பாடலுக்குப் பொருத்தமான கவிஞர் பட்டுக்கோட்டை' எனச் சொல்லி, இன்னொரு கவிஞனுக்குச் சிபாரிசு செய்கிற தைரியம் மருதகாசிக்கு இருந்திருக்கிறது.

ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகள் பாட்டுத்தறியில் இலக்கிய நெசவு செய்த மருதாசி, ஆதிக்க மனமுடையவரல்லர்; அன்பொழுக சக கவிஞர்களிடம் நட்பு பாராட்டியவர்.

'பஞ்செடுத்துப் பதப்படுத்தி
பக்குவமாய் நூல்நூற்று
நெஞ்சொடிய ஆடை நெய்வோன்
கண்ணம்மா - இங்கு
கந்தலுடைக் கட்டுவதேன்?
சொல்லம்மா!'

நானறிய, காதல் பாடலுக்கிடையேயும் கருத்துச் செறிவான வாக்குவாதங்களை நிகழ்த்தும் திரைப் பாடலுக்கு நிகராக நாட்டார் பாடலைக் கூடச் சுட்ட முடியாது. ஆண்டான் X அடிமை, ஏழை X பணக்காரன், ஆத்திகன் X நாத்திகன், கருமி X வள்ளல் என்பனபோல காதலன் X காதலிக்கு இடையிலும் சமூகப் பிரச்னைகளை முன் வைக்கும் நேர்த்தியான கட்டமைப்பை மருதகாசியின் பல பாடல்களில் காணலாம்.

சூஃபி தத்துவத்தில் சொல்லப்பட்டிருக்கும் கருத்துகளை, சித்தர் பாடல்களில் வெளிப்பட்டிருக்கும் பேருண்மைகளை ஒரு சராசரிக்குக் கொண்டு





சேர்க்கும் பணியைத் திரைப்பாடல்கள் செய்திருக்கின்றன. சுதந்திரப் போராட்ட காலத்தில் எப்படி திரைத்துறை தனது பங்களிப்பை நாட்டுக்குச் செய்யத் தவறவில்லையோ, அதே மாதிரி ஒவ்வொரு காலத்திலும் அந்தக் காலத்துக்குரிய தேவைகளை, முழுவது மாக இல்லாவிட்டாலும் முடிந்தவரை நிறைவேற்றியிருக்கின்றன.

'முதல் என்பது தொடக்கம்
முடிவு என்பது அடக்கம்
விடை என்பது விளக்கம்
விதி என்பது என்ன? என்ன?'

கேட்கப்பட்ட கேள்விக் கான விடையைக் கேள்வி யாகவே வைத்திருப்பதில் மனித குலம் மகத்துவ மடைகிறது. தேடினா லும் பதில் கிடைக் காது எனத் தெரிந்து, தெளிவின்மையில் தெளிவு பெறுவதே தத்துவம். குறிப்பாக, மரணத்துக்குப் பிறகு இந்த உடலும் உட லைத் தாங்கிய உயிரும் என்னவாகின் றன எனும் ஆராய்ச்சி தொடர்ந்து கொண்டேயிருக்கிறது.

'உறவென்பது பெருக்கல்
பிரிவென்பது கழித்தல்
வழியென்பது வகுத்தல்
வாழ்வென்பது என்ன? என்ன?'

வாழ்வென்பது இருத்தலா? மர

ணத்துக்கு முந்தைய சம்பவமா? தெரியவில்லை. உடலைவிட்டு நீங்கிய ஆத்மா மரிப்பதில்லை என்கிறார்கள். Out of body experience என்பதுகூட இன்றைய உலகத்தில் அதாவது, அறிவியல் வளர்ச்சிக்குப் பிறகுள்ள உலகத்தில் சாத்தியம் என நிரூபிக்கப்பட்டு வருகிறது.

நண்பர்களைக் காண வாஷிங்டனிலிருந்து சியாட்டில் நகருக்கு வருகிற மரியா என்னும் பெண்ணுக்கு, வந்த இடத்தில் இருதய நோய் ஏற்பட்டு விடுகிறது. உடனே, மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை தொடங்குகிறது. கிம்பர்லி கிளார்க் என்னும் சமூக சேவகி உடனிருந்து கவனித்துக் கொள்கிறார். இருதயம் செயலிழக்க, மருத்துவர்கள் செயற்கை முறையில் இருதயத்தை இயங்க வைக்க முயற்சி செய்து வெற்றி அடைகிறார்கள்.

இந்தச் சிகிச்சை முடிந்ததும் மரியா, கிம்பர்லி கிளார்க்கிடம் சொன்னாள்: "என் உடலில் நடந்த சிகிச்சைகளை மேல் மாடியில் இருந்து நான் பார்த்துக்கொண்டிருந்தேன். என்னுடலிலிருந்து விலகிப் போய் மருத்துவர்களும் நர்ஸ்களும் சோதனை செய்ததைப் பார்த்தது புது அனுபவமாக இருந்தது.



• முன்னாள் தமிழக கவர்னர் உஜ்சிங்கிடம் பாராட்டு பெறும் மருதகாசி...

"நோய்ப் படுக்கையில் கிடந்த நீ எப்படி உன்னைப் பார்க்க முடியும்?" என்று கிம்பர்லி வினவ, இரண்டாவது, மூன்றாவது மாடி அறைகளின் காட்சிகளை அப்படியே மரியா விளக்கியிருக்கிறார்.

மேலும் விசாரித்ததில் மரியா சொல்வதில் உண்மை இருக்கவே, மருத்துவ உலகம் திகைத்த செய்தி 1977-ல் மிகுந்த பரபரப்பை உண்டாக்கியது தனிக்கதை.

எப்படி நம்மைவிட்டு நாம் பிரிந்து போய், பிறகு நமக்குள்ளே வந்துவிட முடியுமோ, அதேபோல ஒரு பாடலுக்குள் நுழைந்து அந்தப் பாடலாசிரியனின் உணர்வுகளையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும். காலம் கடந்தாலும் நிலை பெறும் தன்மையைப் போலத்தான், பாடல்கள் நமக்குத் தரும் சேதியும்!

'பெற்ற மகனை விற்ற அன்னை' என்றொரு படம் மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரித்தது. வெண்பாவில் தனிச் சொல் வருவதுபோல திரைப்பாடலில் வரும் இந்த ஒரு சொல், மொத்த வாக்கியத்தையும் அர்த்தமுடையதாக்கும் அழகை வியந்து கொண்டேயிருக்கலாம். அந்த ஒரு சொல்லை நீக்கிவிட்டுப் பார்த்தால் எதுவுமே பிடிபடாது. எனவே வாக்கியத்தின் சாவி அந்த வார்த்தையில் இருப்பதை உற்றுணர்தல் அவசியம்.

'தென்றல் உறங்கியபோதும்
திங்கள் உறங்கியபோதும்
கண்கள் உறங்கிடுமா - காதல்

**படமெடுத்து**

**நஷ்டப்பட்டிருக்கிறார்;**

**பாட்டெழுதி**

**நஷ்டப்படுத்தியதில்லை!**

கண்கள் உறங்கிடுமா?'

காதல் - என்ற சொல்லைத் தவிர்த்து விட்டால் மேலே உள்ள இரண்டு தொடர்களும் வெறுமனே செயலிழந்து போகுமில்லையா? சுருக்கமாகவும் நெருக்கமாகவும் தருகிற மெட்டுக்குள் கவிதையை நிரப்புவதுதான் பாடலாசிரி

யனின் பணி. இன்னும் சொல்வதெனில், வரிகளை நிரப்பாமல் உணர்வுகளைப் பரப்புவது தான் சிறப்பு.

வெட்கத்தில் தலைகுனிந்து நிலம் பார்க்கும் பெண்ணைக் கதிருக்கு உவமையாக்குவார் மருதகாசி. இயற்கையைப் பெண்ணுக்கு உவமையாக்காமல் பெண்ணிடத்துள்ள குறிப்புகளை வயலில் செழித்துத் திமிரும் கதிருக்கு உவமையாக்கியிருக்கிறார். தொழிற் பாடல் என்ற பகுப்பில் உழைப்பாளர்களின் வேலை தளத்தில் பாடப்படும் பாடல்களுக்குத் தனி மரபுண்டு. அது உழைப்பின் சோர்வைப் போக்கும் உற்சாக மந்திரம். எந்தத் தொழில் புரிபவராயினும் அந்தத் தொழிலில் உள்ள சிறப்புகளை, அலுப்புகளைப் பட்டியலிட்டு பிறகு முத்தாய்ப்பாக, காலம் கனியும் என முடித்தல் இயல்பு. அதிலும் மருதகாசியின் வசீகர ஒழுங்குகளைக் கண்ணுற்றால் அலாதி இன்பம் இரட்டிப்பாகும்.

'நெத்தி வேர்வை
சிந்தினோமே முத்து முத்தாக - அது
நெல் மணியாய்
விளைஞ்சிருக்கு கொத்துக்
கொத்தாக

.................................

வளர்ந்துவிட்ட பருவப்
பெண்போல்
உனக்கு வெட்கமா - தலை
வளைஞ்சு சும்மா பாக்குறியே
தரையின் பக்கமா'

- மருதகாசியின் பாடல் அத்தனையிலும் இப்படியான வியப்புக் குறிகள் ஏராளமுண்டு. காதலனும் காதலியும் களித்துக் கலக்கும் காதல் பாடலானாலும், கட்டடிக்கும் (கதிர்கட்டு) உழவனின் கைத்தழும்பைச் சொன்னாலும் எதார்த்த நெறி பிறழாதவர். கற்பனைச் செங்கற்களால் கவிதா தேவிக்கு மாளிகை எழுப்பாமல், அவளது இதயவீட்டுக்குள் இலக்கிய தீபமேற்ற விரும்பியவர் மருதகாசி.

பதத்துக்கு ஒன்றிரண்டு வரிகளை மாத்திரமே பயன்படுத்த முடிகிறது. ஆனால், பக்குவமான அவருடைய ஆளுமைக்கும் பாட்டுத்துறையில் அவர் நிகழ்த்தியிருக்கும் சாதனைக்கும் நிகராக எதைச் சொல்லியும் நிறைவு செய்ய இயலாது.

## இது எங்க பக்கம்

## ரசிகா...ரசிகா!



**ச**மீபத்தில் 'வேட்டையாடு விளையாடு' படம் பார்க்கக் குடும்பத்தோடு தியேட்டருக்குச் சென்றேன். அது கமல்ஹாசன் படமாதலால், ரசிகக் கூட்டம் மிக அதிகமாக இருந்தது. அவர்களின் அதிகபட்ச ஆர்வத்தால் படம் பார்க்க முடியாமல் நாங்கள் பாதியிலேயே வெளியேற நேர்ந்தது. குடும்பத்தோடு படம் பார்க்க விரும்புகிறவர்கள் தயவு செய்து முப்பது, நாற்பது நாட்களுக்கு மேல் போவது நல்லது!

- வே. சுகுமாரன், சென்னை -50

இதயத்துக்கு நெருக்கமானதை மூளையும், மூளைக்கு நெருக்கமானதை இதயமும் எப்போதும் ஏற்றுக்கொள்வதில்லை என்பார்கள். இதயத்தால் சிந்தித்து, மூளையால் செயல்படுத்தும் வெற்றியாளர்களை நாமறிந்திருக்கிறோம். மருதகாசி இரண்டினிலும் ஒன்றையே செய்தார். அது, பாட்டு. பாட்டைத் தவிர அவர் வேறெதிலும் சோபிக்க விரும்பவில்லை. படமெடுத்துக்கூட நஷ்டப்பட்டிருக்கிறார்; எழுதி யாரையும் நஷ்டப்படுத்தியதில்லை.

**அ**டுத்த தெருவில், ஏதோ கட்சிக் கூட்டம். ஒலிபெருக்கி அலறிக் கொண்டிருக்கிறது. 'இத்தோடு முடித்துக்கொள்' என்பதுபோல அப்பாடல் என்னை அச்சுறுத்தியது. பாடல் வரியைச் சொல்லட்டுமா?
'மனுஷனை மனுஷன் சாப்பிடுறாண்டா
தம்பிப் பயலே... இது மாறுவதெப்போ?
தீருவதெப்போ? நம்மக் கவலே.'

(வீகம்)

"விடாத... அவனை அடி... அடிடா..." ஓங்கி ஒலித்த குரலைக் கேட்டுப் பக்தர்கள் சற்றுத் திகைத்தனர். சத்தம் கேட்ட திசையை நோக்கிச் சிலர் ஓடினர்.

பழைய பட்டு வேட்டி, பட்டுச் சட்டை, மொட்டைத் தலையுடன் கூட்டத்தினரிடையே...

"நான் சொல்றதக் கொஞ்சம் கேளுங்க சாமி, அடிக்காதீங்க..."

கெஞ்சினார்.

"நீ என்னடா சொல்றது, நான் என்னடா கேக்கிறது?" கோயில் காக்கிச் சட்டைக் காவலர் ஓங்கி முகத்தில் குத்தினார்.

கறுப்பு உதட்டில் இரத்தம் கசிந்தது. வியர்வையில் நெற்றித் திருமண் கரையத் துவங்கியது. கண்கள் இருட்ட, அடித்தவரைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டார்.

கயிற்றைப் பிடித்து நின்றிருந்த மற்றொரு காவலரைக் கன்றுக்குட்டி மிரண்டு இழுத்தது. சற்றுத் தடுமாறியவர் ஒருவழியாகத் தன்னை நிலைநிறுத்திக் கொண்டார்.

"யோவ், அடிக்கிறதை நிறுத்துங்கய்யா. இ.ஓ.கிட்ட அந்த ஆளைக் கூட்டிக்கிட்டுப் போங்கயா. அவரு பார்த்துக்கிடுவாரு."

கூட்டத்தினரிடையே நின்றிருந்த பட்டர் குரல் கொடுத்தார்.

ஏதோ ஃபைல் பார்த்துக் கொண்டிருந்த இ.ஓ., தம்முன் நின்றிருந்த கூட்டத்தையும், வாயில் இரத்தம் வடிய, அப்பாவித்தனமாகத் தோற்றமளித்தவரையும் கண்டு அதிர்ச்சியை வெளிக்காட்டாமல் எழுந்து நின்று,

"ஏன் இவ்வளவு கூட்டம்? என்ன பிரச்னை?" என்றார்.

காவலரிடம் விசாரித்தார். கூட்டம் மெதுவாகக் கலைய,

"சார், இந்த ஆளு கோயிலுக்குக் காணிக்கையா விட்டிருந்த கன்னுக்குட்டியை லவட்டிக்கிட்டுப் போகப் பார்த்தான். அதான் நாலு போடு போட்டு, உங்ககிட்ட இழுத்துக்கிட்டு வந்தோம்."

காவலர் காலரைத் தூக்கிவிட்டுக் கொள்ளாத குறையாகப் பதில் அளித்தார்.

"யார்யா நீ? எந்த ஊரு?"

அதட்டும் தொனியில் கேட்டார் இ.ஓ.

உமிழ் நீருடன் கலந்த இரத்தத்தைத் துப்ப இடமின்றி விழுங்கியபடி,

"ஐயா, என் பேரு ரெங்கசாமிங்க. அய்யம்பாளையமுங்க எங்க ஊரு. இந்த கோயில் சாமிதாங்க எங்க குலதெய்வம். ரெண்டு நாளைக்கு முன்னாடிதாங்க இந்தக் கன்னுக்குட்டிய வேண்டுதல் நிறைவேற்றக் காணிக்கையா விட்டேன். இந்தாப் பாருங்க கன்னுக்குட்டிய விட்டதுக்கான ரசீது."

இடுப்பு பெல்ட்டில் இருந்த பிளாஸ்டிக் பர்ஸைத் திறந்து ரசீதை எடுத்து நீட்டினார்.

ரசீதை வாங்கிப் படித்து, அவரிடம் நீட்டியபடி,

"கோயிலுக்கு விட்டது, கோயிலோட தாச்சே! நீ எப்படி அவுத்துக்கிட்டுப் போகலாம்?"



# பி. ஸ்ரீகாந்தன்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

"தப்புதான்னு எல்லாரும் சொல்லுவாங்க. ஆனா, எனக்குத் தப்பாப் படலீங்க. எனக்குக் குடிக்கக் கொஞ்சம் தண்ணி வேணுங்களே..."

குரல் கமரக் கேட்டார்.

"என்னய்யா உளர்ற?"

மேஜை நுனியில் அமர்ந்தபடி கேட்டார் இ.ஓ.

பானைத் தண்ணீரை கிளாஸில் எடுத்து வந்து காவலர் கொடுக்க, குடித்தவர் கும்பிட்டபடி,



# குலதெய்வம்

"உளறலீங்க ஐயா, 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை'ன்னு வள்ளுவர் வாக்குப்படி வாழ முயற்சி பண்ணினதுக்குத்தாங்கய்யா இந்த அடி!"

கண் கலங்கினார்.

"எந்தக் குறள்லயா மாட்டைத் திருடச் சொன்னார் திருவள்ளுவர்?"

"மழை இல்லாம, வெவசாயம் பண்ண முடியாம போனப்பல்லாம் நான் வளர்த்த பசுமாடுதாங்கய்யா எங்களுக்குக் கால் வயித்துக் கஞ்சியாவது குடுத்துக்கிட்டு இருந்துச்சு. அப்படிப்பட்ட பசுமாடு செனையா இருந்தப்போ, ஒரு நாள் மேட்டுல மேஞ்சுக்கிட்டு இருக்கையிலே கால் இடறிக் கீழே விழுந்து வயித்துலே அடி பட்டுப் போச்சுங்க. டாக்டரக் கூட்டிக்கிட்டு வந்து பார்த்தா, அவரு தேறுறது கஷ்டமின்னுட்டுப் போயிட்டாரு. அப்பத்தான் குல தெய்வத்துக்கிட்ட வேண்டிக்கிட்டேன். உசிருக்கு மோசமில்லாம, நல்லபடியாக் கன்னு போட்டா, குட்டியைக் கோயிலுக்கு விட்டுறதா. என் வேண்டுதல் வீண் போகலங்க. எல்லாம் நல்லபடியா ஆச்சு. வேண்டுதல நிறைவேற்றத்தான் அந்தக் கன்னுக் குட்டியைக் கோயில்ல கொண்டுவந்து விட்டேங்க."

"யோவ், மாட்டே எப்படித் திருடலாம்னு ஐயா கேட்டா, நீ என்னமோ

''தனிப்படை அமைத்து வீரர்கள் யாரைத் தேடுகிறார்கள்?''
''போருக்குப் பயந்து ஓடி ஒளிந்த மன்னரைத்தான்!''
- பம்மல் நாகராஜன்



கதை சொல்லிக்கிட்டு இருக்கே?''

பக்கத்தில் நின்றிருந்த காவலர் அதட்டினார்.

ஒரு விரலால் மீசையை வருடியவாறு ரெங்கசாமியைப் பார்த்தபடி அமர்ந்திருந்தார் இ.ஓ.

"என் வேண்டுதல்ல என் வீட்டுக்காரிக்கும், மவனுக்கும் இஷ்டமில்லீங்க. அவங்கள எதுத்துக்கிட்டுத்தாங்க நேத்திக்கடனா மாட்டை விட்டுட்டு ஊருக்கு பஸ்ஸில் போயிக்கிட்டு இருந்தேன். அப்ப என் பக்கத்துல உட்கார்ந்து வந்த வயசானவரு, அரசியல், நாட்டு நடப்புன்னு நல்லாத்தாங்க பேசிக்கிட்டு வந்தாரு. சட்டுன்னு நெஞ்சைப் புடிச்சுக்கிட்டு வலியில துடிச்சாரு. கண்டக்டர்கிட்ட சொன்னேங்க. அவரு, பெரிய ஆஸ்பத்திரிகிட்ட வண்டியை நிறுத்தினாரு. எல்லார் மாதிரியும் வேடிக்கை பார்த்திட்டுப் போக மனசு இல்லாம, அவரைத் தூக்கிக்கிட்டு டாக்டருகிட்டே போனேங்க. சோதிச்சுப் பார்த்துட்டு மாரடைப்புன்னாங்க. வாசல்லேயே ஒக்காந்து இருந்தேங்க. சாயங்காலம் கண்ணு முழிச்சவரு, விஷயத்தை என் மகன்கிட்ட ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போங்க, உங்களுக்குக் கோடி புண்ணியமாப் போகுமின்னு கையெடுத்துக் கும்பிட்டு, விலாசம் சொன்னாருங்க. ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருந்த அந்த இடத்துக்குப் போனேங்க. வெட்ட வெளியில நெறைய மாடுங்கள கட்டியிருந்துச்சு. பக்கத்துல நீட்டமா ஒரு கொட்டகை. சகிக்க முடியாத நாத்தங்க. மூக்கைப் பிடிச்சிக்கிட்டு உள்ளேபோய் விசாரிச்சேன். கையில் ரத்தம் ஒழுக, கத்தியோட ஒருத்தர் வந்தாரு. மதியழகன்றவரைப் பார்க்கணுமின்னேன். கூரான கத்தியாலேயே அவரு இருக்கும் திசையைக் காண்பிச்சாரு. நெறைய மாடுங்க, நாலு காலையும் ஒன்னாக்கட்டி கழுத்து அறுபட்டுக் கெடந்ததுங்க. மனுஷங்களுக்காகவே ஒழைச்சு, ஓஞ்சு போன மாடுகளுக்கு மனுஷன் செய்யுற கைமாறு இதுதானா? மனசு ரொம்ப வேதனைப்பட்டுடுச்சுங்க. இரத்தத்தையெல்லாம் தாண்டி, தொங்கிக்கிட்டிருந்த மாமிசத்தை வெட்டிக்கிட்டிருந்த மதியழகன்கிட்ட விஷயத்தை சொன்னேன். 'ஐயோ, இப்ப எப்படி இருக்காரு'ன்னு பதட்டத்தோடு கண் கலங்கினவரு அவசரமா கையக்காலைக் கழுவிக்கிட்டு, 'ரொம்ப நன்றிங்க'ன்னு சொல்லிட்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினாருங்க.''

ரெங்கசாமி சொல்வதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார் இ.ஓ.

"நான் எங்க ஊருக்குப் போறதுக்காக பஸ் ஸ்டாப்புல வந்து நின்னேங்க. அப்ப இந்த மாடுக அறுக்கிற இடத்தைப் பத்தி பக்கத்துல நின்னுக்கிட்டு இருந்தவருகிட்ட விசாரிச்சேன். பாதி, சந்தையில இருந்து வந்தது. மீதி, கோயில்ல இருந்து வந்ததுன்னாருங்க. எனக்கு பகீர்னு ஆயிருச்சுங்க. ராத்திரி ஊருக்கு வந்து சேர்ந்தேங்க. 'கன்னுக்குட்டி போச்சேன்னு அழுதழுதே காய்ச்சல் அடிச்சு கெடக்கிறா பாருய்யா'ன்னு என் பொண்டாட்டி திட்டினாளுங்க. என் மவ பாசமா வளர்த்த கன்னுக்குட்டியும் அறுப்புக்குப் போயிருமோன்னு பயமாயிருச்சு. ராத்திரி எல்லாம் தூக்கமே இல்லீங்க. கருக்கல்ல எழுந்து, பஸ் பிடிச்சு இங்கே வந்தேங்க. மண்டபத்துல கட்டிப் போட்டிருந்த பல மாடுகளுக்கிடையே என் கன்னுக்குட்டியையும் பார்த்ததுக்கு அப்புறம்தாங்க என் மனசுக்குக் கொஞ்சம் நிம்மதி கெடைச்சதுங்க. மக்கிப்போன வைக்கோல தின்னுட்டு எல்லா மாடும் கழிஞ்சுக்கிட்டுக் கெடக்கிறதைப் பாக்கையில மனுஷங்களோடு சேர்த்து சாமியையும் திட்டணும்னு ஒரு கோவம் வந்துச்சு. சட்டுன்னு கன்னுக் குட்டியை அவுத்துக்கிட்டு நாலடி நடந்தேன். அடிச்சு, உங்க

முன்னாடி கொண்டு வந்து நிப் பாட்டிட்டாங்க. இதுதாங்கய்யா நடந் துச்சு.'

கைகட்டி நின்றார் ரெங்கசாமி.

"எத்தனையாவது வரைக்கும் படிச்சி ருக்கே?" இ.ஒ. கேட்டார்.

"ஏழாப்புங்க."

"சூழலுக்குத் தகுந்த மாதிரி குறள் சொன்னியே, எப்படி?"

"எங்க ஊரு பஞ்சாயத்து ஆபீஸ் கரும்பலகையிலே தெனம் தெனம் வயசான வாத்தியாரு ஒருத்தர் குறள் எழுதிப் போடுவாரு. அதப் படிச்சுட்டுத் தான் வயலுக்கே போவேங்க."

"சரி, உன் வீட்டு விலாசத்தை எழுதிக் கொடுத்திட்டுப் போ."

இ.ஒ. எழுந்தார்.

"சாமி... என் கன்னுக்குட்டிங்க...?"

"நியாயப்படி பார்த்தா, நீ செஞ்ச காரியத்துக்கு உன்னை போலீசுல புடிச்சுக் கொடுத்திருக்கணும். அத நான் பண்ண விரும்பல. நீ போகலாம்."

போலீஸ் ஸ்டேஷன் சென்றால் அவமானம் தன்னைத் தின்றுவிடும். ஆத்திரமும் அழுகையும் வந்தன. மனத்துக் குள் அடக்கிக் கொண்டார்.

"வர்றேன் சாமி."

கையெடுத்து வணங்கியபடி வெளியே வந்து, பைப்பில் முகம் கழுவி, வேஷ்டியில் முகம் துடைத்து, வீட்டுக்குப் புறப்பட் டார்.

நான்கு நாட்கள் கடந்தன. திண் ணையில் அமர்ந்து, தனது மகள் வீட்டுப் பாடங்களை எழுதுவதை பார்த்துக் கொண்டிருந்த ரெங்கசாமி, வாசலில் ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பியவர், திடுக்கிட்டார்.

தன்னை அடித்த அதே காவலர் தன் வீட்டு முன்னே நின்றார். உடல் வியர்த் தது.

"என்னப்பா, உன் வீட்டு விலாசத்தைத் தேடிக் கண்டுபிடிக்கிறதுக்குள்ள தாவு தீர்ந்து போச்சு, போ. லோடு ஆட்டோவுல உன் கன்னுக்குட்டி இருக்கு. சட்டுப்புட் டுன்னு வந்து இறக்கிக்க... வா... நேரமா குது..."

அலுத்துக்கொண்ட காவலர், கர்ச்சீப் பால் முகம் துடைத்துக்கொண்டார்.

"அப்பா... கோயில்ல விட்ட நம்ம கன்னுக்குட்டியா?"

மகள் வாய் பிளந்தாள்.

"என்ன சாமி சொல்றீங்க?"

தெருமுனையில் நிற்கும் ஆட்டோ வைப் பார்த்தபடி ரெங்கசாமி கேட்டார்.

"ஆமாய்யா, உன் பிரச்னைக்கு அப்புறம் கோயில்ல மாடுகள ஏலம் விடுறதில்லைன்னு முடிவு எடுத்திருக் காங்க. வர்ற மாட்டை எல்லாம் தனியார் நடத்துற மகாத்மா கோசாலையில் விடுறதா முடிவெடுத்து அனுப்பிட்டாங்க. அவங்ககிட்ட எங்க இ.ஒ. கேட்டுக்கிட்ட தாலே, கோசாலைக்காரங்க உன் கன்னுக்குட்டிய உன்கிட்டயே ஒப்படைக் கச் சொல்லி என்னை அனுப்பியிருக் காங்க."

குலதெய்வத்துக்கு நன்றி சொல்லும் விதமாக, ரெங்கசாமி வானத்தை நோக்கிக் கும்பிட்டார் கண்கள் கலங்கியபடி.

தெருமுனையில் கன்றுக்குட்டி கத்த, ஆவலுடன் தன் தந்தையின் சட்டை யைப் பிடித்து இழுத்தாள் சிறுமி.

இது எங்க பக்கம்

## உஷார்!



என் குழந்தைக்கு பலசரக்குக் கடையிலிருந்து மிக்சர் வாங்கி வந்தேன். அப்படியே அதனிடம் கொடுத்துவிட, குழந்தை பிரிக்கத் தெரியாமல் பிரித்து, ஸ்டேப்ளர் பின் மிக்சரோடு மிக்சராகக் கலந்துவிட்டது. நல்ல வேளையாக நான் கையில் கொட்டிய மிக்சரில் பின் அகப்பட, பார்த்துவிட்டேன். நீங்களும் இனி உஷாராக இருங் கள்!

- மல்லிகா,
மதுரை

# அருண்... அஸ்வினி...

இதுவரை...

பாமாவும், ஷ்யாமும் நெருக்கமாக இருக்கும் காட்சியை, ஷ்யாமின் தங்கை சுஜி பார்த்துவிடுகிறாள். தான் பார்த்ததை ராதாவிடம் சொல்ல, ராதா அதை நம்ப மறுக்கிறாள். இதற்கிடையே ஊரிலிருந்து வருகிற ராதாவின் மாமியார் ஆனந்தாயி, ராதாவுக்குக் குழந்தை இல்லாததைக் காரணம் காட்டி அவளுக்குப் பல்வேறு தொல்லைகள் கொடுக்கிறாள். ஷ்யாம் மீதிருக்கும் அன்பினால் ராதா அவற்றையெல்லாம் பொறுத்துக் கொள்கிறாள்.

மறுபுறம் சீதாவுக்கு டார்ச்சராக வந்து சேர்கிறாள் அஸ்வினி. கார்த்திக்கின் பிறந்தநாளன்று அவனைச் சந்தித்துப் புடைவை வாங்கிக்கொண்டதோடு, அவனது கழுத்தில் கோயிலில் வாங்கிவந்த தாயத்தைக் கட்டிவிட, அந்தத் தாயத்தைப் பார்த்த சீதா கோபத்தின் உச்சத்துக்குப் போய், அதைக் கழற்றி எறிந்து விடுகிறாள். கார்த்திக்கை விட்டு விலகிப் போகும்படி அஸ்வினியிடம் பேரம் பேசுகிறார்கள் சீதாவும், சந்திரசேகரும். அஸ்வினி, அது தன்னால் முடியாதெனவும், அப்படி விலகிச் செல்வதைவிட தான் சாவதே மேல் என்றும் கூறிவிடுகிறாள்.

வேலையும், வருமானமும் இன்றி அருண் தவித்துக் கொண்டிருக்கையில், பழைய ஜி.எம்.மிடம் சென்று நடந்ததை மன்னிக்குமாறு கூறி வேலை கேட்கலாம் என யோசனை சொல்கிறாள் கவிதா. அவனுக்கும் அது சரியெனப்பட, கவிதாவுடன் சென்று ஜி.எம்மை சந்திக்கிறான்.

அருணுக்கு வேலை கொடுத்தால், மற்றவர்களும் அதைப் பின்பற்றத் துவங்கி விடுவார்கள் என்று கூறி வேலைதர மறுக்கிறார் ஜி.எம். ஆனால், கவிதாவுக்கு வேலை தருவதாகச் சொல்கிறார்.

தயாளன் வீட்டுக்குள் வெள்ளைப் புடைவையுடன் நுழையும் யாமினி, அன்புவின் தம்பி ஆனந்தைத் தன் வசப் படுத்துவதற்காக அவனை நெருங்கத் துவங்குகிறாள்.

கல்பனா வீட்டில், அவளது தங்கை தேஜாவைச் சந்திக்கும் மாதவனின் நண்பன் மகேஷ், அவளிடம் யோகா கற்றுக்கொள்வதைப்போல அவளைக் கவர முயல்கிறான். இதைக்கண்டு மாதவன் பொறாமைப்படுகிறான்.



Nature POWER Beauty Soap Presents
கண்ணாடி கதவுகள்



திங்கள்–வியாழன் - 8.30 pm





இனி...

கவிதா, சுஜிதாவைத் தொடர்ந்து, பாமா – ஷ்யாம் நெருக்கமாக இருப்பதை

ஜானவி பாட்டியும் பார்த்து விடுகிறாள். தான் பார்த்ததை அவள் ராதாவிடம் சொல்ல, ராதா மிகுந்த மனக்குழப்பத்துக் குள்ளாகிறாள். இது தொடர்பாக ஷ்யாமிடம் பேசுகிறாள். இறுதியாக இந்த வதந்திகளுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் எனில் பாமாவுக்குத் திருமணம் செய்து வைப்பதுதான் ஒரே வழி என்றும் முடிவு செய்கிறாள். ராதா எடுத்த இந்த முடிவுக்கு பாமாவின் ரியாக்ஷன் என்ன? ராதாவுக்குக் குழந்தை பிறக்குமா



# அபாயம்!

என்பதைக் கண்டறியும் சோதனையின் முடிவு என்னவானது?

அஸ்வினியினால் பல்வேறு துயரங்களை அனுபவிக்கிற கீதா, அவளை ஊரைவிட்டே துரத்த முடிவு செய்கிறாள். அதற்காக அருணை அழைத்துப் பேசுகிறாள். வேலையின்றி சுற்றிக் கொண்டிருந்த அருண், அஸ்வினியை விரட்டுவதற்காக ரவுடிகளை ஏற்பாடு செய்கிறான். கீதாவின் திட்டம் நிறைவேறியதா? அஸ்வினி ஊரைவிட்டு ஓடினாளா? இந்த அசைன்மென்டால் அருண் அடைந்த லாபமென்ன?

'ஜி.எம். தன்னை எப்படி வேலைக்கு அழைக்கலாம்' என்று கவிதா கோபத்தில் எகிறிக் குதிப்பதுபோல் நடிக்கிறாள். குடும்பச் சூழ்நிலை கருதி அவளை வேலைக்குப் போகுமாறு சொல்கிறான் அருண்.

இதற்கிடையே தயாளன் வீட்டில் அடைக்கலமாகும் யாமினி, அவரது குடும்ப போட்டோவை உடைக்கிறாள். அதனால் அவளுக்கு இரத்தக் காயம் ஏற்படுகிறது. தயாளன் குடும்பமும் அவளது காயத்தைக் கண்டு கலங்குகிறது. ஆனால் யாமினி வெறியோடு போட்டோவை உடைத்ததை ஒருவன் பார்த்து விடுகிறான். அவன் யார்? அவன் பார்த்ததன் விளைவு என்ன?

மகேஷை யோகா கற்க வரவேண்டாமென்று விரட்டிவிடுகின்ற மாதவன், தேஜாவை உரிமையோடு நெருங்க ஆரம்பிக்கிறான். அவனது கெட்ட எண்ணத்தை தேஜா புரிந்துகொண்டாளா? கேள்விகளுக்கான பதில்கள் இந்த வார எபிஸோடுகளாக...

**'கண்ணாடி கதவுகள்' தொடரை விஜய் டி.வியில் பார்த்துவிட்டுத் தகுந்த விமர்சனங்களை எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அதிர்ஷ்டசாலி நேயருக்குத் தங்க நாணயம் பரிசாகக் காத்திருக்கிறது! கல்கியில் வெளியாகும் கூப்பனை விமர்சனக் கடிதத்துடன் இணைத்து அனுப்புங்கள்.**

**கண்ணாடி கதவுகள்,**
**விஜய் டி.வி,**
**அஞ்சல் பெட்டி எண் : 8484,**
**சென்னை - 600 034**

❐ நளினி சம்பத்குமார்

தலைநகரத்து பக்கம் அந்தக்கால ஹிந்திப்பட சூப்பர் ஸ்டார்களான ராஜ்கபூரையும், நர்கிஸையும் பார்த் தீங்கன்னா ஆச்சரியப்படாதீங்க. ஏன்னா, டெல்லில இருக்கிற பல சாலை கள் மற்றும் பூங்காக்களுக்கு பாலிவுட் நட்சத்திரங்களின் பெயர்கள் சூட்டப் படப்போகுதாம். தொடர்ந்து அமிதாப், மாதுரின்னு வரப்போகுதாம்.

இந்தியாவிலேயே அதிக அளவு சொத்து சேர்த்து வைச்சிருக்கிறது டெல்லி வாழ் மக்கள்தான்னு சமீபத்துல நடந்த ஒரு ஆய்வு தெரிவிச்சிருக்கு. பத்து வருடங் களுக்கு ஒரு முறை நடத்தப்படும் இந்த ஆய்வுல சராசரியா ஒவ்வொரு தலைநகர வாசியிடமும் இருக்கிற சொத்து சுமார் 1.62 லட்சம்னு கணக்கிடப்பட்டிருக்கு.

சில நாட்களுக்கு முன்னால ரெண்டு பொண்ணுங்க பிரதமர் வீட்ட 'பராக்' பார்க்க வந்ததுலேர்ந்தே பாதுகாப்பு ரொம்பவே அதிகமா இருக்கு. இப்போ பிரதமர் வீட்டுக்கு ஆட்டோல வந்த ஒரு வயதான பெரியவரைப் பார்த்து ரொம் பவே மிரண்டுட்டாங்க காவலாளிங்க. பெரியவர் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அவருக்கு உள்ளே போக அனுமதியே கிடைக்கல. 'நான் பிரதமரின் சகோதரர். ரயில் நிலையத்திலிருந்து ஆட்டோ பிடிச்சு நேரா இங்க வந்து இறங்கி இருக்கேன்'னு சொல்லியும் பாதுகாவலர்கள் மனசு இறங்கல. கடைசில பிரதமரே, 'சாரி... நான்தான் கார் அனுப்பி என் சகோதரரை பிக்கப் செய்துக்க மறந்துட்டேன்'னு சொல்லி அவரைத் தன்னோடு கூட்டிக்கொண்டு போனாராம்.



• நாங்கதான் நம்பர் ஒன்!

# மறந்துபோன பிரதமர்!

டெல்லியின் பிரதான சாலையில் அமைந்த ஒரு பிரமாண்டமான பங்க ளாவில் குடியேற எந்த அரசியல் தலை வருமே விரும்பறதில்லை. 33, ஷன்மத் மார்க்கில் அமைந்த அந்த பங்களாவில், இதற்கு முன் குடியேறி இருந்த பல அரசி யல் தலைவர்களின் வாழ்க்கை இறங்கு முகமாகப் போனதால் பாவம் பங்க ளாவுக்கு 'பாராமுகம்' கிடைச்சிருக்கு. பங் களாவை 'வாஸ்து' சாஸ்திரப்படி திருத்தி அமைச்சுக் கட்டலாமான்னு யோசனை கள் வந்துட்டிருக்காம்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் **ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி** பீடம் என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

யுவராஜ்

**தா**ம் எழுதிய முதல் கதையே 2006-ஆம் ஆண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியின் முதல் பரிசுக் கதையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதில் உற்சாகமாக இருக்கிறார் மனோரஞ்சிதம் சு.பாபு. "மற்ற பத்திரிகைகள் சிறுகதைகளுக்கான பக்கங்களை மிகவும் சுருக்கிவிட்டபோது, கல்கிதான் இன்றளவும் சிறுகதைகளுக்கான இடத்தைச் சரியாகக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. கல்கி மூலம் சிறுகதை எழுத்தாளனாக அறிமுகமானதில் இரட்டிப்பு மகிழ்ச்சி எனக்கு" என்று கூறும் பாபு, தமது பெயருடன் தாயாரின் பெயரையும் இணைத்து எழுதுகிறார். சுஜாதாவின் வசீகரமான நடையழகு, ம.செ. மற்றும் கோபுலுவின் ஓவியங்கள் இவருக்கு மிகப் பிடித்தவை. இலக்கிய ஆய்வு நூல்கள், சிற்றிதழ்கள், திறனாய்வு நூல்கள் வாசிப்பதில் ஆர்வம்.

**"என் பயம் நீங்கியது!"**

**"இது இன்பமான அனுபவம்!"**

'உண்மை!' கதையை விமர்சித்து வாசகர்களிடமிருந்து எண்ணற்ற கடிதங்கள். "சிலர் கதையின் கருவைத் தவறாகப் புரிந்து கொண்டிருப்பது தெரிகிறது. கதையில் வரும் சிறுவன் உண்மையில் திருடவில்லை. 'உண்மை' என்ற சொல்லுக்கு என்ன அர்த்தம் என்றுகூடப் புரியாத அந்தப் பிஞ்சு மனதுக்கு 'புத்தாடை' என்ற ஆசையை ஊட்டவே, மற்றவர்கள் சொல்லும் திருடினேன் என்ற வார்த்தைக்குப் பெயர்தான் உண்மை என்று நினைத்துக் கொள்கிறான். மற்றபடி இந்தச் சிறுகதை பல மட்டங்களிலும் விமர்சனங்களைக் கிளறிவிட்டிருப்பதில் மகிழ்ச்சி. சிறுகதைகள் அழிந்துவிடுமோ என்ற என் பயம் அறவே நீங்கியது" என்று குதூகலிக்கிறார் பாபு.

**"மனித நேயம் வேண்டும்!"**

**இ**ரண்டாம் பரிசு பெற்ற 'அட்டை' கதாசிரியர் ஜி.ஜெயராமன், 2004-ம் ஆண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசு பெற்றவர். "ஜெரா, ஜெ.பாக்கியலக்ஷ்மி, பாரதி சரண்யா போன்ற பெயர்களில் நான் எழுதி வருகிறேன். கவிதை, நாடகம், நடிப்பு போன்ற பல்துறையிலும் பரிசு பெற்றிருக்கிறேன். சொந்த ஊர் மேட்டூர். கெம்ப்ளாஸ்ட் நிறுவனத்தில்

மெக்கானிக்கல் இன்ஜினீயராகப் பணி. தென்னிய நடிகர் சங்கம் நடத்திய நாடக விழாக்களில் எனது பங்களிப்பும் உண்டு" என்று கூறும் ஜெயராமன், "இரண்டாம் பரிசு பெற்றது இன்பமான அனுபவம்" என்கிறார்.

'பார்வை' சிறுகதையை எழுதிய கே.பி.ஜனார்த்தனன், 'கல்கி' வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். "இதற்கு முன்பும் நான் கல்கி சிறுகதைப் போட்டியில் ஆறுதல் பரிசும், இரண்டாம் பரிசும் பெற்றிருக்கிறேன். மற்ற பத்திரிகைகளிலும் பரிசு வாங்கியிருக்கிறேன். மனைவிதான் எனது முதல் வாசகி. அன்பையும் மனித நேயத்தையும் படைப்புகளில் வெளிப்படுத்த வேண்டுமென்பதுதான் எனது இலக்கு" என்கிறார் ஜனார்த்தனன்.

ஆறுதல் பரிசு பெற்ற கதைகளில் ஒன்றான 'நேர்த்திக்கடன்' கதாசிரியர் செ.செண்பகக்கண்ணு ஆசிரியராகப் பணிபுரிகிறார். மேலகரத்தைச் சேர்ந்தவர். "எனக்குப் பிடித்தவை பாட்டும் பரதமும். திருநெல்வேலி வானொலியில் எனது நாடகங்கள் ஒலிபரப்பாகியுள்ளன. அமரர் கல்கி, தி.ஜானகிராமன் எழுத்துக்கள் மீது தீராப் பற்று. இவ்வாண்டு 'இலக்கிய பீடம்' நடத்திய சிறுகதைப் போட்டியிலும் பரிசு பெற்றிருக்கிறேன். இப்போது ஆறுதல் பரிசு பெற்றாலும் முதல் பரிசு பெறும் என் கனவு நிச்சயம் நிறைவேறும்" என்று அழுத்தம்திருத்தமாகச் சொல்கிறார் செண்பகக்கண்ணு.

மற்றொரு ஆறுதல் பரிசுக் கதையான, 'கனவு பலிக்கும்' வே.குருநாதனின் படைப்பு. விருதுநகர் மாவட்டத்திலுள்ள ஆலட்சுமிபுரம் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். "கல்கி உள்பட பல்வேறு பத்திரிகைகளில் பரிசு பெற்றிருக்கிறேன். ஜாதி, மதம், மொழி கடந்த மனிதநேயத்தை எழுத்தின் மூலம் கொடுக்க வேண்டும் என்பதுதான் எனது நோக்கம்" என்கிறார்.

"சிறுகதை சகாப்தம் முடிந்துவிட்டதாகவே பலரும் நினைக்கிறார்கள். அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி, பிற பத்திரிகைகளால் நடத்தப்படும் போட்டிகள் போன்ற நம் முயற்சிகள் இருக்கும் வரை அந்தப் பேச்சுக்கே இடமில்லை" என்கின்றனர் பரிசு பெற்ற அனைவரும் கோரஸாக.

# "பேச்சுக்கே இடமில்லை!"

"மனைவிதான் என் முதல் வாசகி!"

"என் கனவு நிறைவேறும்!"



ஆசையையும் கோபத்தையும் நம்மால் அடக்க முடிய வில்லை. இவை இரண்டுமே நம்மை எப்பொழுதும் துன்புறுத்தி வருகின்றன. எந்தப் பொருளை எவ்வளவு அடைந்தபோதிலும், போதும் எனும் மன நிம்மதி நமக்கு ஏற்படுவதில்லை; உலகத் துயரம் நம்மை விட்டபாடில்லை. சிறு துயரத்தைக் கண்டு விட்டாலும் மனம் கலங்கத் தான் செய்கிறது. இதனின்றும் கரை ஏற வழியென்ன?

நமது மனம் நமக்கு வசமாக வேண்டும். எவ்வளவோ காலமாகத் தன்னிஷ்டப்படியெல்லாம் தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்த இந்த மனத்தைத் தன்னுள் அடக்கச் சிறிது சிறிதாகவேனும் முயற்சி செய்ய ஆரம்பிக்க வேண்டும். மனம் அடங்கி விட்டால் நமக்கு வேறொன்றும் தேவையில்லை. அதுதான் நாம் பெற வேண்டிய பூர்ண சுதந்திரமாகும்.

ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாவது மனத்தைச் சாந்தமாக வைத்துக் கொண்டு, வேறு நினைவுகளை மனத்தில் செலுத்தாமல், கடவுளது தியானத்தில் அமர வேண்டும். வேறு நினைவுகள் இல்லாமல் தியானம் செய்வதால்

# ஆத்மஞானம்!

நாளடைவில் புத்தியானது தெளிவடை யும். ஆசையையும் கோபத்தையும் அடக்குவதற்கு இது ஒரு சாதனமாகும். இவ்வித சாதனையைப் படிப்படியாக மேற்கொண்ட வனுக்குச் சீக்கிரமாக ஆத்மஞானம் உண்டாகும்.

பிற ஸ்திரீகளைத் தாயார்களாக மதிக்க வேண்டும். பிற உயிரைத் தன்னுயிர் போல் மதிக்க வேண்டும். உயிர் போவதாயிருந்தாலும் உண்மையே பேச வேண்டும். சமூகச் சச்சரவுகள், வகுப்புச் சச்சரவுகள் செய்வதை அறவே ஒழிக்க வேண்டும். எல்லோரிடமும் சமஅன்புகொண்டு ஒழுக வேண்டும். மக்களெல்லாம் சுகமாக வாழ வேண்டுமென ஒவ்வொருவனும் நினைக்க வேண்டும். ஒவ்வொருவனும் தனது அறிவு வளர்ச்சிக்கும், ஆத்ம முன்னேற்றத்துக்கும் பாடுபட வேண்டும். இவற்றுக்கெல்லாம் புத்தியும் சக்தியும் தருமாறு கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**



# புலி ராஜா

பாகம்-1

அமரர் கல்கி

நமது கதாநாயகர் பிரதி பந்துபுரம் மகாராஜா அவர்களை, ஹிஸ் ஹைனஸ் ஜமேதார் - ஜெனரல், கிலேதார்-மேஜர், சத வியாகர ஸம்ஹாரி, மகா ராஜாதிராஜ விசுவபுவன ஸாம்ராட், ஸர் ஜிலானிஜங் ஜங் பகதூர், எம்.ஏ.டி., ஏ.ஸி.டி.சி., ஸி.ஆர்.ஸி.கே. என்றும் சொல்லுவதுண்டு; 'புலி ராஜா' என்று சுருக்கமாகச் சொல்வதும் உண்டு. அவருக்குப் 'புலி ராஜா' என்ற பெயர் ஏன் வந்தது என்பதைத்தான் இங்கே சொல்ல முன் வந்திருக்கிறேன்; ஆனால் முன்வருவதுபோல் வந்துவிட்டுப் பின் வாங்கும் உத்தேசம் எனக்குக் கொஞ்சம் கூடக் கிடையாது. 'ஸ்டுகா' பாம்பர் விமானம் வந்தாலும் நான் பயப்படப் போவதில்லை. 'ஸ்டுகா'தான் என் கதைக்குப் பயந்து ஓடும்படியிருக்கும்.



புலி ராஜாவைப் பற்றி மிகவும் முக்கியமான ஒரு விஷயத்தை முதலிலேயே சொல்லி விடுவது அவசியமாகிறது. ஏனெனில், அவரைப் பற்றிப் படிக்கும்போது அப்பேர்ப்பட்ட அஸகாய சூரனைக் கண்ணால் பார்க்க வேண்டுமென்ற ஆசை எல்லாருக்கும் அளவில்லாமல் உண்டாகிவிடும். ஆனால் அந்த ஆசை நிறைவேறுவதற்கு வழி கிடையாது. பரதன் ராமனிடம் தசரதரைக் குறித்துச் சொன்ன பிரகாரம், உலகிலே பிறக்கும் ஜீவர்களெல்லாம் கடைசியாக எந்த இடத்துக்குப் போய்ச் சேருகிறார்களோ, அங்கே நமது புலி ராஜாவும் விஜயமாகி விட்டார். சுருங்கச் சொன்னால், புலி ராஜா இறந்து போனார்!

அவர் எப்படி இறந்து போனார் என்பது ஓர் அதிசயமான விஜயம். அதைக் கதையின் கடைசியிலேதான் சொல்ல வேண்டும். ஆனால், அவருடைய மரணத்தில் ஒரு பெரிய விசேஷம் என்னவென்றால், அவர் பிறந்த காலத்திலேயே, அவர் ஒரு நாள் இறந்தும் போவார் என்று ஜோசியர்கள் கண்டுபிடித்துச் சொல்லி விட்டார்கள்.

"குழந்தை வீராதி வீரனாகவும், சூராதி சூரனாகவும், தீராதி தீரனாகவும் விளங்குவான். ஆனால்..." என்று மென்று விழுங்கினார்கள். "என்ன சமாசாரம்?" என்று அழுத்திக் கேட்டதன்பேரில், "சொல்லக்கூடாது; ஆனாலும் சொல்ல வேண்டியிருக்கிறது. இந்த ஜாதகனுக்கு ஒரு காலத்தில் மரணம் நேரிடும்" என்றார்கள்.

அந்தச் சமயத்தில் ஒரு பெரிய அதிசயம் நடந்தது. பிறந்து பத்து தினங்கள்தான் ஆன ஜிவானி ஜங் ஜங் பகதூர் வாயிலிருந்து ஓர் ஆச்சரியமான வார்த்தை கிளம்பிற்று. "பிரகஸ்பதிகளே!" என்பதுதான் அந்த வார்த்தை.

எல்லாரும் அப்படியே பிரமித்துப் போய் நின்றுவிட்டார்கள். ஒருவரை

வொருவர் பார்த்து விழித்தார்கள்.

"நான்தான் பேசினேன், பிரகஸ்பதி களே!"

இந்தத் தடவை சந்தேகத்துக்கே இட மில்லை. பிறந்து பத்தே நாளான குழந் தைதான் அவ்வளவு திவ்வியமாகப் பேசி யிருக்கிறது.

தலைமை ஜோசியர் மூக்குக் கண் ணாடியைக் கழற்றிவிட்டு குழந்தையை உற்றுப் பார்த்தார்.

"பிறந்தவர் யாவரும் இறந்துதானே தீரவேண்டும்? அதற்கு நீங்கள் என்ன ஜோசியம் சொல்வது? மரணம் எந்த விதத்தில் நேரும் என்று சொன் னாலும் அர்த்தம் உண்டு" என்று சின்னஞ்சிறு கீச்சுக் குரலில் யுவராஜா திருவாய் மலர்ந்தார்.

ஜோசியர் தலைவர், மூக்கிலே விரலை வைத்து அதிசயித்தார். பத்து நாள் குழந்தை பேசுகிறது. அதோடு இல்லை, இவ்வளவு புத்திசாலித்தன மான கேள்வி கேட்கிறது என்றால் - இதென்ன, யுத்த இலாகா அறிக்கை களைப்போல் தோன்றுகிறதே தவிர, நம்பக்கூடியதாயிருக்கிறதா?

தலைமை ஜோசியர் மூக்கி லிருந்து விரலை எடுத்துவிட்டு, யுவராஜாவை உற்றுப் பார்த்து விட்டுச் சொன்னார் :

"ரிஷப லக்கினத்தில் யுவ ராஜா ஜனனம். ரிஷபத்துக்கும் புலிக்கும் பகை. ஆகையால், புலியினால் மரணம்."

புலி என்ற வார்த்தை யைக் கேட்டதும் யுவ ராஜா ஜங் ஜங் பகதூர் பயந்து நடுங்கியிருப்பார் என்று நீங்கள் நினைக்க லாம். அதுதான் இல்லை. புலி என்று கேட்டதும், யுவராஜா ஓர் உறுமல் உறுமினார். பிறகு இரண்டு பயங்கர மான வார்த்தைகள் அவர் வாயிலிருந்து வெளி வந்தன :

"புலிகள் ஜாக் கிரதை!"

மேலே கூறிய சம்ப வம், பிரதிபந்தபுரத்தில் வழங்கி வந்த வதந்தியேதான். ஆனால், பின்னால் நடந்தவற்றைக் கொண்டு பார்க்கும்போது அது உண்மையாயிருக் கலாமென்றே தோன்றுகிறது.

யுவராஜா ஜங் ஜங் பகதூர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். மேற்கூறிய சம்பவத் தைத் தவிர அவருடைய குழந்தைப் பருவத்தில் வேறு அதிசயம் ஒன்றும்



நடக்கவில்லை. மற்ற சுதேச சமஸ்தானங்களின் யுவராஜாக்களைப் போல்தான் அவரும் இங்கிலீஷ் பசுவின் பாலைக் குடித்து, இங்கிலீஷ் நர்ஸினால் போஷிக்கப்பட்டு, இங்கிலீஷ் உபாத்தியாயரால் இங்கிலீஷ் கற்பிக்கப்பட்டு, இங்கிலீஷ் சினிமாக்கள் பார்த்து - இப்படியாக வளர்ந்து வந்தார். வயது இருபது ஆனதும், அதுவரைக்கும் 'கோர்ட் ஆப் வார்ட்'ஸில் இருந்த ராஜ்யமும் கைக்கு வந்தது.

ஆனால், ராஜ்யத்தில் மட்டும் மேற்சொன்ன ஜோசியக் கூற்று எல்லாருக்கும் நினைவிருந்தது. அநேகர் அதைப்பற்றிப் பேசியும் வந்தார்கள். மெதுவாக மகாராஜாவின் காதிலும் இந்தப் பேச்சு விழுந்தது.

பிரதிபந்தபுரம் சமஸ்தானத்தில் காடுகள் ஏராளமாக உண்டு. அவற்றில் புலிகளும் உண்டு. 'தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்லலாம்' என்ற பழமொழி மகாராஜாவுக்குத் தெரிந்திருந்தது. தன்னைக் கொல்ல வரும் புலியைக் கொல்லுவதைப் பற்றி என்ன ஆட்சேபணை? மகாராஜா புலிவேட்டையாடக் கிளம்பினார்.



முதல் புலியைக் கொன்றதும் மகாராஜாவுக்கு ஏற்பட்ட குதூகலத்துக்கு அளவில்லை. சமஸ்தானத்தின் ஜோசியர் தலைவரைக் கூப்பிட்டு அனுப்பினார். செத்த புலியைக் காட்டி, "இப்போது என்ன சொல்கிறீர்?" என்று கேட்டார்.

"மகாராஜா இந்த மாதிரியே 99 புலிகளைக் கொன்று விடலாம்; ஆனால்..." என்று ஜோசியர் இழுத்தார்.

"ஆனால் என்ன? தைரியமாகச் சொல்லும்!"

"ஆனால், நூறாவது புலி விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்."

"சரி, நூறாவது புலியையும் கொன்று விட்டால் அப்புறம்?"

"அப்புறம் என்னுடைய ஜோசியப் புஸ்தகங்களையெல்லாம் கிழித்து நெருப்பு வைத்துவிட்டு..."

"வைத்துவிட்டு..."

"... தலையில் கிராப்பு வைத்துக் கொண்டு இன்ஷூரன்ஸ் கம்பெனி ஏஜண்டாகப் போய்விடுகிறேன்!" என்று ஜோசியர் சம்பந்தமில்லாமல் முடித்தார்.

பிரதிபந்தபுரம் சமஸ்தானத்தின் காடுகளிலிருந்த புலிகளுக்கெல்லாம் அன்று முதல் கொண்டாட்டந்தான்.

மகாராஜாவைத் தவிர வேறு யாரும் புலி வேட்டை ஆடக் கூடாது என்று உத்தரவு பிறந்தது.

''வர்ர வெள்ளி என் மனைவிக்குப் பர்த்டே, மறுநாள் சனி எங்க வெட்டிங்டே!''
''விடு... அடுத்தடுத்த சோதனைகள் என்பது சில சமயம் தவிர்க்க முடியாதபடி வந்து தொலைக்கும்!''
- உ.ராஜாஜி



தப்பித்தவறி யாராவது ஒரு புலியின்மேல் கல்லை விட்டெறிந்தால்கூட, அப்படிப்பட்ட ராஜதுரோகத்தைச் செய்தவனுடைய சொத்துக்களெல்லாம் பறிமுதல் செய்யப்படுமென்று தண்டோரா போடப்பட்டது.

மகாராஜா நூறு புலிகளை முழுசாகக் கொன்ற பிறகுதான் மற்ற காரியங்களில் கவனம் செலுத்துவது என்று கங்கணம் கட்டிக்கொண்டார். அவருடைய உத்தேசம் நன்கு நிறைவேறியும் வந்தது.

அபாயங்கள் அவருக்கு நேரிடாமல் இல்லை. சில தடவை துப்பாக்கிக் குறி தவறி புலி அவர்மேல் பாயவும், அதனுடன் கைகலந்து சண்டை போடவும் நேரிட்டது. ஒவ்வொரு தடவையிலும் அவர்தான் கடைசியில் வெற்றி பெற்றார்.

இன்னொரு சமயம் அவருடைய சிம்மாசனத்துக்கே ஆபத்து வருவதாயிருந்தது. ஒரு பெரிய பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் பிரதிபந்தபுரத்துக்கு விஜயம் செய்தார். அவருக்குப் புலி வேட்டையில் ரொம்பப் பிரியம். அதைக் காட்டிலும், தாம் கொன்ற புலிக்குப் பக்கத்தில் நின்று புகைப்படம் எடுத்துக் கொள்வதில் அதிகப் பிரியம். வழக்கம்போல் அவர் பிரதிபந்தபுரம் சமஸ்தானத்திலும் புலி வேட்டையாட விரும்பினார். ஆனால் மகாராஜா கண்டிப்பாக மறுத்துவிட்டார். "வேறு என்ன வேட்டைக்கு வேணுமானாலும் ஏற்பாடு செய்கிறேன். பன்றி வேட்டையா? ஆடுங்கள். எலி வேட்டையா? நடத்துங்கள். கொசு வேட்டையா? இதோ தயார். ஆனால், புலி வேட்டை மட்டும் இங்கே முடியாது'' என்றார் மகாராஜா.

''துரைதான் புலியைக் கொன்று ஆகவேண்டுமென்று அவசியமில்லை. மகாராஜாவே கொல்லலாம். செத்த புலிக்குப் பக்கத்தில், கையில் துப்பாக்கியுடன் நின்று போட்டோ எடுத்துக் கொள்வதுதான் துரைக்கு முக்கியம்'' என்று மேற்படி பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரின் காரியதரிசி சமஸ்தான திவான் மூலமாகச் சொல்லியனுப்பினார். இதற்கும் மகாராஜா சம்மதிக்கவில்லை. இப்போது கொஞ்சம் இடங்கொடுத்துவிட்டால், அப்புறம் இன்னும் சில பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களும் புலி வேட்டைக்கு வந்து சேரலாமல்லவா?

இப்படி ஒரு பெரிய ஆங்கில உத்தியோகஸ்தரின் விருப்பத்துக்குக் குறுக்கே நின்றதன் பயனாக, மகாராஜாவின் கையைவிட்டு ராஜ்யமே போய்விடுமோ என்று பயம் உண்டாயிற்று.

இதைக் குறித்து மகாராஜாவும் திவானும் கலந்தாலோசித்தார்கள். உடனே கல்கத்தாவிலுள்ள ஒரு பெரிய இங்கிலீஷ் நகை கம்பெனிக்குத் தந்தி போயிற்று. "வைர மோதிரங்களில் சில உயர்ந்த மாதிரிகள் அனுப்பி வைக்கவும்'' என்று.

அவ்விதமே வைர மோதிரங்கள் சுமார் ஐம்பது தினுசுகள் வந்தன. அவற்றை அப்படியே மகாராஜா மேற்படி பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரின் தர்மபத்தினிக்கு அனுப்பி வைத்தார். துரைசானி அம்மாள் ஏதாவது ஒன்றிரண்டு பொறுக்கிக் கொண்டு பாக்கியைத் திருப்பி அனுப்பி விடுவாளென்று மகாராஜாவும் திவானும் எதிர்பார்த்தார்கள்.

ஆனால், சற்று நேரத்திற்கெல்லாம் துரைசானியிடமிருந்து பதில் வந்துவிட்டது: "நீங்கள் அனுப்பிய பரிசு மோதிரங்களுக்காக மிகவும் வந்தனம்."

இரண்டு நாளைக்கெல்லாம் நகை கம்பெனியாரிடமிருந்து மூன்று லட்ச ரூபாய்க்கு 'பில்' வந்தது. மூன்று லட்ச ரூபாய் போனாலும் சிம்மாசனத்துக்கு ஆபத்தில்லாமல் தப்பியது பற்றி மகாராஜாவுக்குச் சந்தோஷந்தான்.

(தொடரும்)

  

## ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்
## ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.

# ஆவணி கடை ஞாயிறு தீர்த்தவாரி உற்சவம்

**நாள்: வ்யய வருடம் ஆவணி மாதம் 25-ஆம் நாள் ஞாயிறு 10.09.2006**

அன்புடையீர்,

முக்தித் தலமாம் கருவிலியில் நிகழும் வ்யய ஆண்டு ஆவணித் திங்கள் 25ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை (10.9.2006) அன்று ஆவணிக் கடைஞாயிறு தீர்த்தவாரி உற்சவம் கீழ்க்கண்ட நிரலின்படி நடைபெற இருக்கின்றது. அன்பர்கள் அனைவரும் பங்கு கொண்டு இறையருள் பெற வேண்டுகிறோம்.

### நிகழ்ச்சி நிரல்

| | | | |
|---|---|---|---|
| காலை | மணி | 7:00 | திருக்குளத்தில் தீர்த்தவாரி |
| " | " | 8:00 | கோ பூஜை, மஹா கணபதி ஹோமம் |
| " | " | 9:00 | கடஸ்தாபனம், மஹா ஸங்கல்பம் |
| " | " | 9:30 | மஹாந்யாஸத்துடன் ஸ்ரீ ருத்ர பாராயணம் ஆரம்பம் |
| பகல் | மணி | 11:30 | ஸ்ரீ ருத்ர ஹோமம் ஆரம்பம் |
| " | " | 12:30 | வாஸோர்தாரா, தீபாராதனை |
| " | " | 1:00 | ஸ்வாமி அம்பாளுக்கு மஹாபிஷேகம் |
| " | " | 1:30 | மஹா தீபாராதனை |

பொருளாகவோ, பணமாகவோ நன்கொடை அனுப்ப வேண்டிய, மேற்கொண்டு விவரங்கள் அறிய அணுகவேண்டிய முகவரிகள்:

G. குஞ்சிதபாதம், FCA.,
G. நடேசன் & Co.,
டபீர் மேலத்தெரு,
கும்பகோணம்-612 001
போன்: 0435 2420047

G. கண்ணன்,
D/127-A, ராஜமன்னார் சாலை,
கே.கே.நகர்,
சென்னை -78.
போன்: 044-24836495

V.L. நாராயண சாஸ்திரிகள்,
25/1 சுப்பாரெட்டித் தெரு,
மேற்கு மாம்பலம்,
சென்னை - 600 033.
போன்: 044-24897125

*என்றும் இறைபணியில்*

*Dr. V. கிருஷ்ணமூர்த்தி*
*பரம்பரை அறங்காவலர்*

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா (Regd).
மற்றும் கிராமவாசிகள்

*பொன். சிவசங்கரன் M.A. நிர்வாக அதிகாரி*

❒ மனோ சௌந்தர்

ஹாட்ரிக் வெற்றி கிடைத்தும் அமைதியாக இருக்கிறார் விஷால். ஆக்ஷன் ஹீரோவாக அழுத்தம்திருத்தமாகத் தம்மை தமிழ் சினிமாவில் பதியமிட்டிருப்பவரின் அடுத்த இலக்கு 'சிவப்பதிகாரம்.' பிஸியாக இருந்தாலும் பேசத் தொடங்கி விட்டால் பிரியமாகிவிடுகிறார்.

"இந்த சந்தோஷம் என்னைக்கும் நிலைக்கணும்ஜி. இதைத்தான் நான் தினமும் வேண்டிக்கிறேன்" என்று மேலே பார்க்கிறார்.

'கறுப்பா இருந்தும் கலக்கறீங்களே...' என்றால், கடுப்பாகிறார்.

"கறுப்புன்னா கெட்ட நிறமா? அதான் பாஸ் அதிர்ஷ்டத்தோட அடுத்த வீடு. எல்லாரும் சொல்ற உதாரணம்தான்... ரஜினி சார் கலக்காத கலக்கலா? அவர் என்னைக்காவது வருத்தப்பட்டுப் பேசியிருக்காரா? இல்ல மக்கள்தான் ஏதாவது சொல்லியிருக்காங்களா? நம்மளூட்டும் அதே தான்ஜி. என்னையும் என் படத்தையும் பாராட்டுறவங்க சொல்ற மொத வார்த்தை என்ன தெரியுமா? 'எங்க பக்கத்து வீட்டு பையன் மாதிரி இருக்கீங்க'ன்னு தான். அவங்க சொல்றது, நான் கருப்பா இருக்கறதாலதான். ஸோ, நான் உங்க வீட்ல ஒருத்தங்கறத மறந்துடாதீங்க!"



• ரீமாசென்

'ஏன், தொடர்ந்து ஆக்ஷன் படங்களா பண்ணி, அடிதடி நாயகனாவே மக்கள் மனசுல இடம் ...' என்று நாம் முடிக்கும் முன்பே விஷாலிடமிருந்து அம்பெனப் பாய்கிறது பதில்.

"அதான் நீங்களே சொல்லிட்டீங்களே... மக்கள் மனசுல அழுத்தமா இடம் பிடிக்கணும்னுதான் பண்றேன். இன்னொரு விஷயமும் சொல்லணும், ஒரு கதைக்கு எந்த அளவு ஆக்ஷன் தேவையோ, அந்த அளவுதான் செய்றேன். அளவுக்கு மிஞ்சினா எல்லாமே டேஞ்சர்தான்னு எனக்குத் தெரியாதா என்ன?"

'அப்பா தயாரிப்பாளருங்கறது உங்களுக்குப் பலமா, பலவீனமா'

"எப்படி பலவீனமாகும்? அவர் எனக்கு வாய்ப்புக் கொடுக்கலேன்னா நான் உங்ககிட்ட பேசிட்டிருக்க முடியுமா? என்னை நடிகனா செதுக்கினதுல அவருக்குத்தான் அதிக பங்கிருக்கு. என் முதல் படத்தை நிறைய செலவு பண்ணி எடுத்தாரு. நிச்சயமா வேற யாரும் அந்த ரிஸ்க்கை எடுத்திருக்க மாட்டாங்க" என்றவர், அடுத்து நாம் அவரது அண்ணன் அஜயைப் பற்றி ஆரம்பிக்கும் முன்பாகவே பேசத் தொடங்கிவிட்டார்.

"அஜய் என் அண்ணன் இல்ல, நண்பன். என் படங்களைப் பார்த்துட்டு நல்லா விமர்சிப்பாரு. அவரோட அட்வைஸை கல்வெட்டுல செதுக்கி வச்சு பார்த்துட்டே இருக்கணும்போலத் தோணும். 'புகழ் அடைவது முக்கியமல்ல. அதைத் தக்க வச்சுக்கிறதுதான் சாமர்த்தியம். ஒரு படம் நல்லா ஓடுச்சின்னு உட்கார்ந்துட்டாகூட, ரேஸ்ல மத்தவங்க நம்மள முந்திக்கிட்டு ஓடுவாங்க'ன்னு அவர் பேசப் பேச, எனக்கே என்னை உணரத் தோணும். என்னைவிட என் மேல நம்பிக்கை அதிகம் வைக்கறது அஜய்தான்" என்ற உணர்ச்சி மேலிட்டவரை கூல் பண்ண விரும்பி,

# "நான் உங்க

'அப்படியென்ன நட்பு ரீமாவுக்கும் உங்களுக்கும்... அடுத்தடுத்து இடைவெளி இல்லாம நடிக்கறீங்களே?' என்றோம்.

"இடைவெளி இல்லாமங்கறது தப்பு...

செல்லமேவுக்கு அப்புறம் சண்டைக் கோழில ரீமா இல்ல, மீரா. என் படத் தோட எந்த ஹீரோயினையும் நான் செலக்ட் பண்றது இல்ல. எல்லாமே டைரக்டர்ஸ் சாய்ஸ். நடிக்கிறதுக்கே நேரம் இல்லாம ஓடிட்டிருக்கேன்... இதுல நட்புக்கு எங்க காலமிருக்கு... ஆனா ஒண்ணு பாஸ், ரீமாவோட ஆக்டிங்குக்கு நான் அடிமை. அற்புதமா நடிப்பாங்க. அதைத் தாண்டி எதுனா இருந்துச்சுன்னா நான் சொல்லி அனுப்பறேன்."

'சரிசரி, தமிழ் சினிமா மோசமான சூழல்ல சிக்க ஆக்ஷன் படங்களும் ஒரு காரணம். தொடர்ந்து அந்த மாதிரி படங் களையே செய்ற நீங்களும் அந்தத் தப் புக்குத் துணை போறதாத் தோணலியா?" என்றால், விஷாலிடம் தீவிர யோசனை. கொஞ்ச நேர மௌனத்துக்குப் பிறகு பேச ஆரம்பிக்கிறார்...

"போன வருஷம் வந்த படங்களைவிட இந்த வருஷம் வந்த எல்லா ஆக்ஷன் படங்களும் நல்லா போயிருக்கு. ஆக, அதைத்தான் மக்கள் விரும்பறாங்கன்னு உங்களுக்குப் புரியல? இன்னைக்கும் தியேட்டர்ல ஆக்ஷன் சீனப்போதான் விசில் பறக்குது" என்று நியாயம் பேசிய வரைப் பார்த்து பெருமூச்சு விடுவதைத் தவிர வேறென்ன செய்ய?

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**




# வீட்ல ஒருத்தன்!”

❒ ஜி.எஸ்.எஸ்

ஆகஸ்ட் 15 நமக்கு முக்கிய தினம்! ஜப்பானுக்கும்தான்; வேறொரு விதத்தில்.

சமீபத்தில் அந்த நாளில் ஜப்பானியப் பிரதமர் கொய்சுமி, தமது நாட்டிலுள்ள யாஸுகுனி போர் நினைவகத்துக்குச் செல்ல, சீனர்களுக்கும் கொரியர்களுக்கும் இரத்தக் கொதிப்பு கூடியிருக்கிறது.

"எதற்கு இப்படி ஒரு செயல்? ஆசிய நாடுகளுக்கிடையே ஜப்பான் ஒரு புற்றுநோய் என்பது மறுபடியும் நிரூபணமாகியிருக்கிறது. ஜப்பானுக்கும், கொரியாவுக்குமிடையே உள்ள உறவு, மோசத்திலிருந்து படுமோசம் என்ற நிலைக்கு இதனால் தள்ளப்பட்டிருக்கிறது' என்று அறிக்கை விட்டிருக்கிறது தென்கொரிய ஆளும் கட்சி.

சீன நாடோ "இனி ஜப்பானுக்கும், எங்களுக்குமிடையே எந்த உச்சி மாநாடும் கிடையாது. ஏன், இப்போதைக்குப்

# ஏன், ஜப்பான் இப்படி நடந்து கொள்கிறது?

பேச்சுவார்த்தையே கிடையாது" என்று கோபித்துக் கொண்டிருக்கிறது. ஏன்?

இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்தபோது 1945, ஆகஸ்ட் 15-ல் தான் ஜப்பான் சரணடைந்தது. அதன் பிறகு போரில் இறந்த ஜப்பானிய ராணுவ வீரர்களுக்கு நினைவகம் எழுப்பியது ஜப்பானிய அரசு. அதாவது, உலகப் போரில் சீன மற்றும் தென் கொரிய இராணுவ வீரர்களைக் கொன்றவர்களுக்காக எழுப்பப்பட்ட நினைவகம் அது. அதற்குக் கடும் எதிர்ப்பு தெரிவித்தன சீனாவும், கொரியாவும். வாமன தேசமாக இருந்தாலும் ஜப்பானின் ஆக்ரமிப்பு ஆசை கொஞ்ச நஞ்சமல்ல. ஒருகாலத்தில் கொரியர்களையும் சீனாவையும் ஆட்டிப் படைத்து அவமானப்படுத்தியது ஜப்பான்.

எனவே ஜப்பானியப் போர் வீரர்களுக்குச் செய்யும் அஞ்சலி, தங்கள் நாட்டை அவமதிப்பதுபோல என்று கருதுகின்றன இந்த இரு ஆசிய நாடுகளும்.

இந்த நிலையில் அடுத்த மாதம் ஜப்பானில் தேர்தல் நடக்கவிருக்கிறது. இப்போதைய பிரதமர் கொய்சுமி, பதவியிலிருந்து இறங்க வேண்டிய சூழல். நீண்ட காலம் பிரதமராக இருந்த இவரது ஆட்சியில் வெளியுறவு பலவீனமானது. சீனாவுடனும், தென்கொரியாவுடனும் ஜப்பான் கொண்ட உறவு மேலும் நசிந்தது. அதன் உச்சகட்டம்தான் போர் நினைவக விஜயம் (அதே சமயம் நாட்டின் பொருளாதாரத்தைச் சரி செய்ததில் கொய்சுமிக்கு முக்கிய பங்கு உண்டு).

அடுத்து வரும் பிரதமர் இவ் விஷயத்தை எப்படி அணுகுவார் என்பதுதான் இப்போதைய பேச்சாயிருக்கிறது.

தமது வாரிசு யார் என்பதை கொய்சுமி இன்னமும் இனம் காட்டவில்லை. ஆனால் அந்தப் பதவிக்கு இரண்டு பெயர்கள் அடிபடுகின்றன. ஒருவர் ஷின்ஸோ ஏப். ஐம்பத்தொரு வயதான இவர் தலைமை அமைச்சராக, செயலாளராக இருக்கிறார். மரபுகளை விட புதுமைகளை அதிகம் ஆதரிப்பவர்.

மற்றவர் ஸுவோஃபுகுடா. பிற ஆசிய நாடுகளிடம் பெரிதும் விட்டுக்கொடுத்தாவது நட்புணர்வை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்பது இவர் விருப்பம். இந்த இருவருமே ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதால் இருவரில் ஒருவர்தான் தேர்தலில் நிற்க முடியும்.

இப்போதைய வெளியுறவுத்துறை அமைச்சரான தரோ அஸோவும் தொடர்ந்து மேற்படி நினைவகத்துக்குச் செல்பவர். பிரதமரானால் இந்தப் பழக்

சுத்தை நிறுத்திவிடுவதாக வெளிப்படையாகவே தன் சந்தர்ப்பவாதத்தைக் காட்டியிருக்கிறார். நிதியமைச்சர் டானிகாகிக்கும் பிரதமர் பதவிமேல் ஒரு கண் உண்டு. எனினும் அவர் நாட்டின் நிதி நிலையைச் சரியாகச் சமாளிக்காததால் அவருக்கு வெற்றி வாய்ப்புக் குறைவு.

சீன நீர்மூழ்கிக் கப்பல்கள் அடிக்கடி ஜப்பானிய எல்லைக்குள் வந்து செல்கின்றன. அதனால் சீனாவைக் கட்டுக்குள் வைத்திருக்கும் பிரதமர் வேண்டும் என்பது ஜப்பானிய மக்கள் விருப்பம். ஃபுகுடாவின் தந்தை ஏற்கெனவே ஜப்பானிய அரசியலில் மிதவாதத்தை வெளிப்படுத்தியவர். அந்த விதத்தில் அவர் மகன் பிரதமரானால் வெளியுறவு சிறப்பாக இருக்கும் என்று நம்பப்படுகிறது.

ஜப்பானியத் தேர்தலை, ஜப்பானை விட அதிக ஆர்வத்துடன் இப்போது கவனித்து வருகின்றன, சீனாவும் தென்கொரியாவும். ○

போயிட்டு வர்றேன், மன்மோகன்ஜி!

ம்... நீங்க தப்பிச்சுட்டீங்க... நான்தான்...!

# அஞ்சலியின் அர்த்தம் என்ன?

இந்த உலகத்தில் எல்லோரும் அன்பைப் பற்றிப் பேசுகிறார்கள். பரஸ்பரம் அன்பு செலுத்துவதாகக் கூறுகிறார்கள். ஆனால், அதனை உண்மையான அன்பு என்று சொல்ல முடியாது. இன்று நாம் அன்பு என்று நினைத்துக் கொண்டிருப்பது சுயநலம் என்ற அழுக்கு கலந்த அன்பாகும். இது தங்க முலாம் பூசப்பட்ட நகை போன்றது. அணிந்துகொண்டால், பார்ப்பதற்கு நன்றாக இருக்கும். ஆனால், அதில் தங்கம் கிடையாது; அதற்கு மதிப்பு கிடையாது; அதன் சாயம் சீக்கிரமே வெளுத்துவிடும்.

பலரும் அம்மாவிடம், "அம்மா! நீங்கள் இந்த உலக மக்களுக்கு விடுக்கும் செய்தி என்ன?" என்று அடிக்கடி கேட்பார்கள். அம்மா இந்த உலகுக்கு வழங்கும் செய்தி அன்பு மட்டுமே! அம்மாவுக்கு ஒரே ஒரு மொழிதான் தெரியும். அது அன்புமொழி. அது அனைவருக்கும் புரியும் மொழி.

அம்மா இந்த உலகத்தில் உள்ள குழந்தைகள் மீது அன்பு காட்டுவதில் பாரபட்சம் பார்ப்பது கிடையாது. அன்பு செலுத்துவது என்பது அம்மா இயற்கையாக, இயல்பாக நிகழும் ஒரு விஷயம். அம்மாவால் யாரையும் எந்தச் சமயத்திலும் வெறுக்க முடியாது. இன்று உலகத்தில் ஒரு விஷயத்துக்கு மிகக் கடுமையான பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது என்றால், அது தன்னலமற்ற அன்புக் குத்தான்.



ஒரு சிறுவனுக்கு உடம்பு சரியில்லாமல் போனது. அவனை சிகிச்சைக்காக மருத்துவமனையில் சேர்த்தார்கள். அவனுக்கு நல்ல முறையில் சிகிச்சை அளிக்கப்பட்டு நன்றாக குணமடைந்தான். மருத்துவமனையிலிருந்து வீட்டுக்குப் புறப்பட வேண்டிய நேரம் வந்தது. "அப்பா! இந்த மருத்துவமனை மிக நல்ல இடம். இங்கே உள்ளவர்கள் எல்லோரும் என் மீது எவ்வளவு அன்பாக இருந்தார்கள் தெரியுமா? இங்குள்ள டாக்டர்கள், நர்ஸ்கள், இதர ஊழியர்கள் என்று அனைவருமே என்மீது அன்பும், பரிவும் காட்டி, நான் நோயிலிருந்து குணமடைய மிகவும் உதவியாக இருந்தார்கள். என்னை அவர்கள் ஒரு தடவை கூடத் திட்டவில்லை. நான் மருந்து சாப்பிட மறுத்தபோதும் அவர்கள் அன்புடன் நடந்துகொண்டார்களே

## அம்மா!

ஒரு நாள் அம்மாவை தரிசிக்க நோய்வாய்ப்பட்ட இளம்பெண் ஒருத்தி வந்திருந்தாள். அவளை அம்மா அரவணைத்து ஆசி கூறியபோது, அவள் அம்மா அணிந்திருந்த வெள்ளைச் சேலையின் மீது வாந்தி எடுத்துவிட்டாள். அம்மா சற்றுக்கூட அருவருப்பு அடையாமல், எழுந்து சென்று வேறு சேலை உடுத்தி வந்தார். வாந்திபட்ட சேலையைச் சுத்தம் செய்வதற்காக, ஒரு பிரம்மச்சாரிணி ஒரு கழியினை எடுத்துக் கொண்டு வந்து அதன் நுனியால் சேலையினை எடுத்துக் கொண்டு செல்வதை அம்மா கவனித்துவிட்டார். "சேவை செய்ய வந்துவிட்டு அருவருப்பு பார்ப்பது தவறு. எல்லோரிடமும் இறைவனைக் கண்டு, சமமான மனோபாவத்துடன் சேவை செய்வதுதான் தெய்வீகம். அதனைப் புரிந்துகொள்ளாமல், பஜனை, தியானம் இவற்றால் எந்தவிதமான பயனுமில்லை" என்று அந்த பிரம்மச்சாரிணிக்கு அறிவுரை சொன்னதுடன் நிற்காமல், தானே அந்தச் சேலையைத் துவைத்தார் அம்மா.

- மௌலி

தவிர, என்னை அடிக்கவில்லை. ஆனால் வீட்டில் நீங்களும் அம்மாவும் என்னைத் தினமும் திட்டுகிறீர்கள்; அடிக்கிறீர்கள்'' என்று தன்னுடைய மனக் குமுறலை வெளிப்படுத்தினான்.

அடுத்த சில நிமிடங்களில் ஆஸ்பத்திரி நர்ஸ் ஒருவர் அங்கே வந்தார். ஒரு காகிதத்தை அந்தப் பையனின் தந்தையிடம் நீட்டினார். அதைக் கவனித்த மகன், "அப்பா! அது என்ன?" என்று கேட்டான். "ஓ! இதுவா? இந்த ஆஸ்பத்திரியில் இருப்பவர்கள் காட்டிய அன்பு, பரிவு, பொறுமை, அனைத்துக்குமான



# கடவுளின் விருப்பம்! 22

கட்டணம்'' என்றார்.

குழந்தைகளே! இன்று உலகில் காணப்படும் அன்பும் இது போலத்தான் ஆகிவிட்டது. எவரது அன்புக்கும் பின்னால் ஒரு சுயநல நோக்கம் மறைந்துள்ளது. சந்தையில் காணும் வியாபார மனோபாவம் மனித உறவுகளிலும் வந்துவிட்டது. அடுத்தவரிடமிருந்து நமக்குக் கிடைப்பதற்கு ஒன்றுமில்லை என்றால்



"அந்த சீரியல் தயாரிப்பாளர் ரொம்ப சந்தோஷமா சிரிச்சுட்டு இருக்காரே..."
"அந்தச் சீரியலுக்குப் பின்னால எத்தனை லட்சம் பெண்களோட அழுகை இருக்கோ...?"
- சீர்காழி ரேவதி

அங்கே அன்போ, உறவோ தோன்றுவதில்லை. பெறுவதில் சிறிதளவு குறைந்தாலும், அங்கே உறவு முறிந்து விடுகிறது. மனதை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிற விஷயம் சுயநலம்தான்.

இன்று ஒரு வீட்டில் மூன்று பேர் இருந்தால், அவர்கள் மூவரும் மூன்று தீவுகளில் வசிப்பவர்களைப் போல இருக்கிறார்கள். இன்றைய உலகம், உண்மையான அமைதி, நிம்மதி என்றால் என்னவென்பதை அறிய முடியாத நிலையை அடைந்துவிட்டது. இந்த நிலை மாற வேண்டும். சுயநலத்துக்குப் பதில் சுயநலமின்மை வளர வேண்டும்.

மற்ற சுகங்களுக்காக அன்பை விலை பேசும் நிலை ஒழிய வேண்டும். அன்பு என்பது நம்முடைய உயிர்மூச்சாக வேண்டும். இதுவே அம்மாவின் விருப்பம். 'நான் அன்பு; அன்பே என் வடிவம்' என்ற மனோபாவம் வந்துவிட்டால், பின்னர் அமைதி நாடி நாம் எங்கும் செல்ல வேண்டியதில்லை. அமைதியே நம்மைத் தேடி வரும்.

ஒருவர் கையில் நூறு ரூபாய் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதிலிருந்து பத்து ரூபாயை எடுத்து வேறு ஒருவருக்குக் கொடுத்து விட்டால், மீதி தொண்ணூறு ரூபாய்தான் இருக்கும். ஆனால், அன்பு இது போன்றதன்று. எவ்வளவு கொடுத்தாலும், அது சற்றும் குறையாது. இறைக்க, இறைக்க கிணற்றில் தண்ணீர் ஊறுவது மாதிரி அன்பும் கொடுக்கக் கொடுக்க அதிகரிக்கவே செய்யும்.

மனிதன் அன்புக்காகவே இந்த உலகில் பிறக்கிறான்; அதற்காகவே ஏங்குகிறான். ஆனால், இன்று கிடைக்காத ஒன்று அன்புதான்; அன்புக்குத்தான் இன்றைய உலகில் மிகக் கடுமையான பஞ்சம் நிலவுகிறது.

வாசலில் விளக்கு ஏற்றி வைத்தால் அங்கு வரும் அனைவருக்கும் அது ஒரே மாதிரியான வெளிச்சத்தைத்தான் தரும். அதில் ஏற்றத்தாழ்வு எதுவும் இருக்காது. ஆனால், கதவை மூடிக்கொண்டு அறைக்குள்ளேயே இருந்தால் இருட்டில் இருக்க நேரிடும். இருட்டுக்குள் இருந்து கொண்டு, வெளிச்சத்தைக் குறை சொல்லி எந்தப் பலனும் இல்லை. வெளிச்சம் வேண்டுமென்றால் அறைக் கதவைத் திறந்து வைக்க வேண்டும். அக வெளிச்சம் வேண்டுமென்றால் மனக் கதவைத் திறந்து வைக்க வேண்டும்.

சூரியனுக்கு எதைப் பார்க்கவும் மெழுகுவர்த்தி வெளிச்சம் அவசியமில்லை. சிலர் இறைவன் எங்கோ ஆகாயத்தில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த இறைவனை திருப்திப்படுத்துவதற்காக அவர்கள் பணத்தை வாரி இறைக்கத் தயாராக இருக்கிறார்கள். ஆனால், இப்படி பணத்தை வாரி இறைத்துவிட்டால் இறைவனின் அருள் கிடைத்து விடாது. ஏழைகளுக்குச் சேவை செய்வதுதான் இறைவனுக்கு மிகவும் விருப்பமான செயல். கோடிரூபாய் செலவழித்து ஆடம்பரமாக ஆண்டவனுக்குத் திருவிழா நடத்துவதைவிட, ஓர் ஏழையின் கண்ணீரைத் துடைக்க சில ஆறுதல் வார்த்தைகள் சொன்னால் இறைவன் மகிழ்ச்சி அடைவான். அந்த ஏழையின் கண்ணீரைத் துடைக்கும் நல்ல மனதைக் காணும் இறைவனின் மனம் மகிழ்கிறது. அப்படிப்பட்ட மனம் எங்கே இருந்தாலும் இறைவன் அங்கே ஓடோடி வருவான். பட்டு மெத்தையை விட, தங்க சிம்மாசனத்தைவிட, கருணை நிறைந்த இதயத்தில் வசிப்பதையே இறைவன் விரும்புகிறான். (அன்பு பெருகும்)

உங்கள் உலோகப் பொருட்கள் என்றும் பொலிவுடன் விளங்க




24 ct GOLD PLATED GIFTS






**Show room:**
**Next to jeeva park - opp to HDFC Bank**
**# 85 G.N.Chetty Road, T.Nagar, Chennai - 17**
**Tel: 28156370 Mobile 9840021384,**
**Timing : 9.30 am to 7.00 pm** SUNDAY HOLIDAY
**For online Purchase Please Visit:**
**www.chennaionline.com, www.indiavarta.com, www.sifymail.com**

எங்களிடம் 24 CT கோல்டு பிளேட்டடு விக்ரகங்களும் கிடைக்கும்



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"
29-30 கிழக்கு ஐய்யன் தெரு, கும்பகோணம் - 612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ Off :
(0435) 5532239
Fax : 2425948
Patasala :
5532238, 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதையர்களான ஸ்ரீ நாகயாம்பா ஸவேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 463 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம் என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| ங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# சந்தேகம்

இருட்டுக் கரையால் வெளிச்சம் வேகவேகமாகத் தின்னப்பட்டுக் கொண்டிருந்தது. கரைக்குத் திரும்பும் மீன்பிடிப் படகுகளை, கைகளைக் கட்டிக் கொண்டுப் பார்த்துக் கொண்டிருந்தான் குமரன். அவன் முகத்தின் உணர்ச்சிகள் கரைந்து போய் முகம் மட்டும் தெரிந்தது.

''விளையாட்டாச் சொல்றீங்களா, இல்லை நிஜமா சொல்றீங்களா?'' என்றான் பத்ரி.

''நிஜமாதான் பத்ரி. என்னைப் பத்தி ஏதாச்சும் தப்புத் தப்பா நானே பொண்ணு வீட்டுக்கு எழுதிப் போடலாமான்னுகூட ஒரு யோசனை மனசுல எட்டிப் பார்த்துச்சு.''

''என்ன பேச்சு இது?''

''நிச்சயமான இந்தக் கல்யாணத்துல எனக்கு ஈடுபாடே வரலை பத்ரி. அப்பா, அம்மா வார்த்தைக்காக தலையாட்டிட்டேன். ஆனா ஒவ்வொரு நிமிஷமும் தப்பு செஞ்சுட்டேனோன்னு ஒரு குறுகுறுப்பு என்னை வறுத்தெடுக்குது.''

''நீங்க சொல்றதுல கொஞ்சம்கூட நியாயம் இல்லைங்க குமரன். இதுல ஒரு பொண்ணோட வாழ்க்கை சம்பந்தப் பட்டிருக்கு. அந்த மஞ்சரியோட கோணத்திலேர்ந்து யோசிச்சுப் பாருங்க. ஒரு கோடீஸ்வர வீட்டுல, படிச்ச அழகான மாப்பிள்ளை தனக்குக் கிடைச்சதை நினைச்சு அவங்க எவ்வளவு பூரிச்சுப் போயிருப்பாங்க? மனசுக்குள்ள தினம் தினம் எத்தனைக் கனவுகள் பறந்துக்கிட்டிருக்கும்?''

''உண்மைதான். அதையெல்லாம் நினைச்சுதான் கல்யாணம் அதுபாட்டுக்கு நடக்கட்டும், எந்தத் தடையும் ஏற்படுத்த வேண்டாம்னு ஒரு தீர்மானத்துக்கு வந்து சும்மா இருக்கேன், பத்ரி.''

''உங்க தடுமாற்றத்துக்கு என்ன காரணம்?''

''பூஜாதான்! அவளை என்னால இன்னும் மறக்க முடியலை பத்ரி.''

''உண்மை கசந்தாலும் அதை ஏத்துக்கிட்டுதானே ஆகணும்?''

''புரியுது. மனசு தவிப்பை நிறுத்த மாட்டேங்குதே..''

''குமரன், தப்பா நினைக்காதீங்க. கல்யாணத்துக்கு அப்புறம் அந்த மஞ்சரி கிட்டே எப்படி நடந்துக்கப் போறீங்க? ஒரு அன்பான கணவனா கலகலப்பா பழகப் போறீங்களா, இல்லை உம்முன்னு மூஞ்சைத் தூக்கி வெச்சுக்கிட்டு ஒரு விலகலோட நடந்துக்கப் போறீங்களா?''

''அதைப்பத்தியெல்லாம் நான் எதுவுமே யோசிக்கலை.''

''அந்தப் பொண்ணு பூஜாவுக்குக் கல்யாணம் ஆயிடுச்சா?''

''ஆமாம்.''

''அப்படின்னா நீங்க இன்னும் பூஜாவை மனசுல நினைச்சிட்டிருக்கறது தப்புங்க குமரன்.''

இதற்குப் பதில் எதுவும் சொல்லாத குமரன், பத்ரியை விட்டு விலகிச் சற்று தூரம் நடந்துவிட்டு, மீண்டும் அவனிடம் திரும்பினான்; பெருமூச்சு விட்டான்; கேட்டான்.

''பத்ரி, நீங்க லவ் பண்ணியிருக்கீங்களா?''

''இல்லை. லவ் பண்ணணும்னு ஆசைப்பட்டிருக்கேன். எனக்குக் காதல் அமையலை.''

''அதனால உங்களால என் உணர்வு





களைத் துல்லியமாப் புரிஞ்சிக்க முடியாது. காதல் ஒருவழிப் பாதை மாதிரிங்க. போகலாம்; திரும்பிவர முடியாது. வெட்ட வெட்ட வளர்ற வாழை மாதிரிங்க. நிறுத்தப் பார்த்தா முடியாது."

"தயவு செஞ்சு தத்துவார்த்தமா உதாரணங்கள் சொல்லி ஒரு தப்பை நியாயப் படுத்தாதீங்க குமரன்."

"நான் எங்க நியாயம்னு சொன்னேன்? கல்யாணத்துக்கப்புறமும் பூஜாவை மனசுல நினைக்கிறது சரியில்லைன்னு எனக்கும் தெரியுது. ஆனா என் எண்ணங்கள் என் கட்டுப்பாட்டுல நிக்க மாட்டேங்குதே..."

"கட்டுப்படுத்திதான் ஆகணும். அநியாயம் செய்யற ஒருத்தனைப் பார்க்கறப்போ இவனைக் கொலை செஞ்சா என்னன்னு மனசுல ஒரு ஆத்திரம் வரும். இந்த ஆத்திரத்தைக் கட்டுப்படுத்துவீங்களா, இல்லை மனசுல கொம்பு சீவி வளர்த்துக்குவீங்களா?"

"கொலை வெறியும் காதல் உணர்வும் வேற வேறன்னு நான் வாதம் செய்ய மாட்டேன். இந்த ரெண்டுலயும் நீங்க எந்த அளவு பாதிக்கப்பட்டிருக்கீங்கன்றதைப் பொருத்துதான் உங்க செயல்கள் கட்டுப்பாட்டுக்கு உள்ளே வர்றதும், வராம அலைபாய்றதும் அமையும்."

"நீங்க என்ன சொன்னாலும் எனக்குச் சமாதானமாகலை."

"ஒரு வேளை பூஜாவுக்கு அமைஞ்ச கணவன் நல்லவனா, அன்பானவனா

6

அமைஞ்சிருந்தா, அவ நிம்மதியா சந்தோஷமா வாழ்ந்திட்டிருக்கான்னு என் மனசு அமைதியாயிடும். இப்ப குற்ற உணர்ச்சி வதைக்குது பத்ரி'' என்றவனுக்குக் குரல் அடைத்தது.

குமரன் அலைகளிலிருந்து விலகி, அமர வாகாக இருந்த ஒரு பாறையில் அமர்ந்தான்; அருகில் சென்று பத்ரியும் அமர்ந் தான்.

"பத்ரி, பூஜாவும் நானும் ஏன் பிரிய வேண்டி வந்துச்சு தெரியுமா?'' என்றான். நினைவுகளில் ஆழ்ந்தான்.

**க**ல்லூரி விடுதியில் ஷேவ் செய்து கொண்டிருந்தான் குமரன். அதிரும் மேற்கத்திய இசை அறையை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. உதடுகள் இணைந்து பாடின. உடல் மெலிதாக ஆடியது. ஒலித்த செல்போனில் பெயர் பார்த்து உற்சாகமாகி உடனே இசையை நிறுத்தி விட்டு, "ஹாய்... பூஜா! உன் போனைத் தான் எதிர்பார்த்துக்கிட்டே இருந்தேன். எத்தனை மணிக்கு மீட் பண்றோம்?''

"எதுக்கு மீட் பண்ணணும்?'' என்றாள் பூஜா எதிர்முனையில்.

"ஏய்! என்ன குரல் ஒரு மாதிரியா இருக்கு? உடம்பு சரியில்லையா?''

"இல்லை, மனசு!''

''ஓ! பதினஞ்சு நாளா பாக்கலையில்ல? அந்தக் கோபமா? நான் என்ன பண்றது? ஒரு வாரம்னு ப்ளான் பண்ணித்தான் புறப் பட்டோம். பாங்காக், தாய்லாந்த் அழகா இருந்ததுதான் ப்ரோக்ராமை மாத்துனதுக்குக் காரணம்.''

''பாங்காக் அழகா இருந்ததா? இல்லை... அங்க இருந்த பொண்ணுங்க அழகா இருந்தாங்களா?''

"ஓ! அம்மையாருக்குப் பொறாமையா? உன்னையும்தானே கூப்பிட்டேன். நீதானே வரலை? நீ வந்திருந்தா நான் ஏன் உன்னை விட்டுட்டு மத்த பொண்ணுங்களை சைட் அடிக்கப் போறேன்? சரி, எத்தனை மணிக்குன்னு சொல்லு?''

''அவசியம் மீட் பண்ணணுமான்னு யோசிக்கிறேன்.''

''டெலிபோன்ல அறைய முடியாதுன்னுதானே இப்படியெல்லாம் வெறுப்பேத்தறே? நேர்ல வா வெச்சுக்கிறேன். பூஜா, உனக்கு நான் என்ன ப்ரசெண்ட் வாங்கிட்டு வந்துருக்கேன்னு கெஸ் பண்ணு பார்க்கலாம்.''

''ப்ரசெண்ட் ஏற்கெனவே எனக்கு வந்து சேர்ந்திருச்சு.''

''என்ன உளர்றே? நான் எதுவும் அனுப்பலையே...''

''பத்து மணிக்கு காபி ஷாப் வா. வர்றப்போ உன்னோட லேப்டாப் எடுத்துட்டு வா; புரியும்.''

''ஒரு ரொமாண்டிக் மீட்டிங்குக்கு எதுக்கு கம்ப்யூட்டர்லாம் எடுத்துட்டு வரச் சொல்றே?''

''நீ எடுத்துட்டு வா; புரியும். வைக்கிறேன்.''

குமரனுக்குக் குழப்பமாக இருந்தது. என்ன பேசுகிறாள் இவள்? குரலும் சரியில்லை; பேச்சும் சரியில்லை. எதற்கு லேப்டாப்?

குமரன் அவசரமாகக் குளித்துவிட்டுப் பூஜாவுக்காக வாங்கின லேட்டஸ்ட் செல்போனை ஒரு பூக்காகிதத்தில் சுற்றிப் பார்சல் செய்து எடுத்துக்கொண்டு பைக்கில் லேப்டாப்போடு புறப்பட்டான்.

காபி ஷாப்பில் நேரம் பத்தைத் தாண்டி, பத்தரையைக் கடந்து, பதினொன்றைத் தொட்டும் அவள் வரவில்லை. அவனுடைய செல்லில் தொடர்பு கொள்ள முயன்றபோது, அது அணைக்கப்பட்டிருந்தது. பொறுமை அதன் எல்லையைத் தொட்டுக் குழப்பமாகி, குழப்பம் அதன் எல்லையைத் தொட்டு வெறுப்பாகி

''எதிரி நாட்டு மன்னன் கடும் நிதி நெருக்கடியில் உள்ளானா, எப்படிக் கண்டுபிடித்தீர்கள் மன்னா?''
''ஒன் ஸைட் ஓலையிலே செய்தி எழுதியனுப்பியிருக்கானே!''
- ஃபாத்திமா



வெறுப்பு அதன் எல்லையைத் தொட்டுக் கோபமாகிக் கொந்தளித்துக் கொண்டிருந்தபோது அவள் வந்து சேர்ந்தாள்.

எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு, கையசைத்து 'ஹாய்' சொன்னான். பதிலுக்கு ஒரு ஹாய் இல்லை; கையசைப்பு இல்லை; ஒரு கோடளவு புன்னகைகூட இல்லை. அமைதியாக வந்து எதிரே அமர்ந்தாள்.




"ஒரு மணி நேரமாக் காத்துட்டு இருக்கேன்."

"வரவே வேணாம்னுதான் இருந்தேன். அப்புறம் இந்தக் கடைசி சந்திப்பைத் தவிர்க்கவே முடியாதுன்னு தோணிச்சு. அதான் வந்தேன்."

"பூஜா! உனக்கென்ன பைத்தியமா? ஏன் புதிராவே பேசிட்டு இருக்கே? உன் மனசுல என்னதான் இருக்கு?"

"நிச்சயமா உன் மனசுல இருக்கற மாதிரி ஆபாசமோ, அழுக்கோ கண்டிப்பா இல்லை."

"திஸ் இஸ் த லிமிட். ஏதாச்சும் சொல்றதா இருந்தா நேரடியாச் சொல்லு. இப்படி அர்த்தமில்லாம குத்தலாப் பேசறது எனக்குப் பிடிக்கலை."

"சரி, நேராவே சொல்றேன். குமரன், நான் உங்களை எக்கச்சக்கமா நம்பிட்டேன். நீங்க ஒரு கேவலமான மனுஷன்னு எனக்குத் தெரியாமப் போயிடுச்சு. நல்ல வேளை! நம்ம கல்யாணத்துக்கு முன்னாடியே தெரிஞ்சுக்கிட்டேனே, கடவுளுக்குதான் நன்றி சொல்லணும். மறுபடி என்னைப் பார்க்க முயற்சி பண்ண வேணாம். போன் பண்ணவும் வேணாம். இதான் நம்ம கடைசி சந்திப்பு. குட்பை! வர்றேன்" என்று படபடப்பாகப் பேசிவிட்டு வேகமாக எழுந்த பூஜாவின் கையைப் பிடித்தான் குமரன்.

"பூஜா, உக்காரு. நீ பாட்டுக்கு வந்தே; படபடப்பா என்னமோ உளறினே; புறப்படறே. என்னைப் பாத்தா உனக்கு மடையனாத் தெரியுதா? நீ சொன்ன ஒவ்வொரு வார்த்தைக்கும் விளக்கம் சொல்லாம இங்கேர்ந்து உன்னைப் போக விடமாட்டேன்."

"உன் மனசாட்சியைக் கேட்டுப் பாரு. தெரியும். அந்த அசிங்கத்தை என் வாயால சொல்ல விரும்பலை. பாங்காக்ல நீ எப்படி நடந்துக்கிட்டேன்னு நினைச்சுப் பாரு; புரியும். கையை விடு."

"என் மனசு சுத்தமாத்தான் இருக்கு. உன் மனசைத்தான் யாரோ குழப்பியிருக்காங்க. யாரு, என்ன சொன்னாங்க? சொல்லு."

"இது சொல்ற விஷயமில்லை. பார்க்கற விஷயம். நீயே பார்த்து ரசிச்சுக்கோ" என்ற பூஜா தன் கைப்பையிலிருந்து ஒரு சிடி எடுத்து அவன் முன்னால வீசிவிட்டு, கையை உதறிக்கொண்டு வாசலுக்கு நடந்தாள்.

சி.டியை லேப்டாப்பில் பொருத்தி ஓடவிட்ட குமரன், அதில் தெரிந்த காட்சியைப் பார்த்து அதிர்ந்தான். ஒரு நிமிடம் ஓடிய அந்த வீடியோ காட்சியில் பாங்காக்கில் ஒரு காபரே நடன அரங்கில் அரைகுறை ஆடையில் இருந்த சின காபரே அழகியைக் கட்டிப் பிடித்து குமரன் முத்தமிட்டான்.

அதைப் பார்த்து அதிர்ந்த குமரன் ஆத்திரமாக எழுந்தான். வெளியேறி அவளைத் தேடினான்; காணவில்லை. பைக்கை எடுத்துக்கொண்டு விடுதிக்கு விரைந்தான். வராந்தாவில் நடந்து அந்த அறைக்குள் வந்து, உடற்பயிற்சி செய்து கொண்டிருந்த நண்பன் கார்த்திக்கின் சட்டையைப் பிடித்தான். சிவந்த கண்களுடன் கோபமாகக் கேட்டான்.

"டேய்! எவன்டா இந்த மாதிரி பண்ணினது? பாங்காக்ல காபரேக்கு நீங்கள்லாம் போனப்போ நான் வர

இது எங்க பக்கம்

# என்றைக்கு?



**மா**நகரப் போக்குவரத்துக் கழகப் பேருந்தில் பயணித்துக் கொண்டிருந்தபோது நடந்த சம்பவம் இது. நான் நின்று வந்தேன். ஒரு ஸ்டாப்பிங்கில் ஏறிய கர்ப்பிணிப் பெண் ஒருவர், நிற்க முடியாமல் தள்ளாடி வந்தார். ஆண்கள்தான் எழுந்து இடம் கொடுக்கவில்லையென்றால், பெண்களும் அப்படியே இருந்ததுதான் வேதனை. மனிதாபிமானம் மரித்துப் போய்விட்டதா நம் சமூகத்தில் என்கிற பயம் என்னை ஆக்ரமித்துவிட்டது. குறைந்த பட்சம் கர்ப்பிணி என்பதற்காகவாவது யாராவது உட்கார இடம் கொடுத்திருக்கலாம். சிலர் கண்மூடி தூங்குவது போல் நடித்தது கொடுமை. ம்...என்று நாம் திருந்தப் போகிறோம்?

- பாலா,
சென்னை - 78

மாட்டேன்னு பிடிவாதம் பிடிச்ச காரணத்துக்காக உங்கள்ல எவனோ தப்பா நடந்துக்கிட்டு, எடுத்த வீடியோல க்ராபிக்ஸ் பண்ணி நான் தப்பு பண்ணின மாதிரி சி.டி. ரெடி செஞ்சி பூஜாவுக்கு அனுப்பிச்சது யாரு?"

கார்த்திக் அவன் கையைத் தட்டிவிட்டு, "அன்னிக்கு காபரேக்குப் போனது பதினாலு பேரு! இதுல என்னை மட்டும் வந்து கேட்டா எப்படி? எனக்கு எதுவும் தெரியாது. நான் எதுவும் செய்யலை. அவ்வளவுதான் சொல்ல முடியும்" என்றான்.

"**அ**ப்புறம்?" என்றான் பத்ரி.

"அன்னிக்கு காபரேக்குப் போன என்னோட பதினாலு ஃப்ரெண்ட்ஸையும் ஒரே இடத்துல கூட்டி வெச்சு விசாரிச்சேன். ஒவ்வொருத்தனும் எனக்குத் தெரியாதுன்னு பிடிவாதமாச் சொன்னான். 'என் காதலே முறியற மாதிரி இருக்கு. இப்படி விளையாண்டது யாருன்னு தயவுசெஞ்சு சொல்லுங்க'ன்னு கெஞ்சினேன். கடைசி வரைக்கும் எவனும் ஒத்துக்கலை. பூஜாவுக்கு போன் செஞ்சு அன்னிக்கு நான் போகவே இல்லைங்கற உண்மையை விளக்கினேன். அவ நம்பத் தயாரா இல்லை. இருபது பக்கத்துக்குத் தபால் எழுதினேன். பிரிக்காமலேயே திருப்பி அனுப்பிச்சா. நேர்ல சந்திக்க மறுத்தா. அவளுக்கு ஏற்பட்ட சந்தேகத்தோட உச்சத்துல ஏற்கெனவே அவங்க வீட்ல முடிவு செஞ்சிருந்த மாப்பிள்ளையைக் கல்யாணம் பண்ணிக்க சம்மதிச்சா. ஒரு எல்லைக்கு மேல் என்னை நிரூபிக்க நான் எடுத்துக்கிட்ட எல்லா முயற்சிகளும் முடிவுக்கு வந்திருச்சு. அடிப்படையான நம்பிக்கை போனதுக்கப்பறம் என்னதான் செய்ய முடியும்? அவ கல்யாணம் நடந்துச்சு. நான் செத்துடலாம்னு நெனைச்சேன். அவ கல்யாணம் முடிஞ்சு ஒரு வாரம் கழிச்சுத்தான் எங்க காதலோட விளையாடினது யாருன்னு தெரிஞ்சது. அந்த உண்மை ரொம்ப அதிர்ச்சியா இருந்தது" என்றான் குமரன்.

"யார் அது?" என்றான் ஆர்வத்துடன் பத்ரி.

(தொடரும்)

□ த.இ.தாகூர்

# நானும் போராளிதான்!

**தஸ்லிமா நஸ்ரீனை நினைவிருக்கிறதா? சர்ச்சைக்குரிய நாவல் எழுதியதற்காக தமது சொந்த நாடான வங்கதேசத்திலிருந்து நாடு கடத்தப்பட்டார். கொஞ்ச காலம் ஸ்வீடனில் தங்கியிருந்தவர், இந்திய அரசாங்கத்துக்கு மனுப் போட்டு, தற்போது கொல்கத்தாவில் வசித்து வருகிறார். அண்மையில் கன்னியாகுமரிக்கு வந்திருந்தவரை சந்தித்துப் பேசினோம்.**

“கன்னியாகுமரி எனது கனவுப் பிரதேசம். ஒரு காலத்தில் இங்கெல்லாம் வருவோமா என்று ஏங்கியிருக்கிறேன். இன்றைக்கு அது சாத்தியமானதில் எல்லையில்லா மகிழ்ச்சி” என்று ஆனந்தப்பட்டவர், தமது கடந்த கால வாழ்க்கையைப் பற்றிப் பேசும்போது ஆழ்ந்த சோகத்துக்குப் போய்விடுகிறார்.

“1993-ஆம் ஆண்டு நான் எழுதிய ‘லஜ்ஜா’ என்ற நாவலில் அயோத்தியில் மக்கள் படும் துன்பங்களை, குறிப்பாகக் கலவரத்தால் பாதிக்கப்பட்ட ஒரு குடும்பம் பட்ட வேதனையை அப்படியே வடித்திருந்தேன். இதனை இஸ்லாமிய மத போதகர்கள் இஸ்லாத்துக்கு எதிராக நான் எழுதுவதாகக் கருதி, என்னைக் கொலை செய்யத் துணிந்தனர். அதன் காரணமாக நான் நாட்டைவிட்டு வெளியேற்றப்பட்டேன்.

இப்போது நான் கொல்கத்தாவில் வசிப்பதை மிக இன்பமாக உணர்கிறேன். அம்மக்கள் பேசும் மொழிதான் எனது தாய்மொழி. எனவே எனது சொந்த நாட்டில், என் உறவினர்களுடன் வசிப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. மத உணர்வு என்பது உள்ளத்தில் இருக்க வேண்டும். மனிதம் மதிக்கப்பட வேண்டும். தனி மனித உரிமையை மதங்கள் கட்டுப்படுத்தக் கூடாது. மனித உரிமைகள், பெண்களின் சுதந்திரம் அனுமதிக்கப்பட வேண்டும் என்ற என் வற்புறுத்துதலை மதபோதகர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. நான் இந்தியாவில் தாற்காலிகத் தங்கும் உரிமை பெற்றிருக்கின்றேன். மேலும் ஆறு மாதங்கள் நீட்டித்துத் தர வேண்டுமென மத்திய அரசின் வெளியுறவுத் துறையை அணுகியுள்ளேன்.

இந்திய அரசு எனக்குத் தகுந்த பாதுகாப்பு தந்துள்ளது. இந்த நாட்டுக்கு நான் நன்றிக்கடன் பட்டுள்ளேன். இந்தியாவின் மதச்சார்பற்ற தன்மை, மனிதநேயம் காப்பதை நான் கொண்ட உணர்வுகளின் பிரதிபலிப்பாகப் பார்க்கிறேன்” என்றவரிடம், ‘இஸ்லாம் மதச் சட்டத்தை எதிர்க்கும் உங்களுக்கு வேறு மதத்துக்கு மாறும் எண்ணம் உண்டா?’ என்றோம்.

“இல்லை. என் சகோதரிகள் மதக் கட்டுப்பாட்டின் தாக்கத்தை எதிர்கொள்ள முடியாத கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறார்கள். தேவையற்ற மதக் கட்டுப்பாடுகள், சுதந்திரமின்மை ஆகியவற்றை நான் சார்ந்த மதத்துக்குள் இருந்தே போராடுகின்ற போராளி நான். இந்தப் போராட்டத்தின் வெற்றியை ஒருவேளை நான் பார்க்க முடியாது போகலாம்! எதிர்வரும் இளைய சமுதாயம் சமூக மாற்றத்தின் சிந்தனையாளர்களாக உருவாகும் நாள் வெகுதொலைவில் இல்லை!” என்கிறார் தஸ்லிமா நஸ்ரீன். ○

• தஸ்லிமா



# அதிரடி குணமும் ஆழ்கடல் மனமும்..!

❒ ஸ்ரீநி

வசந்தா கந்தசாமி! சென்னை ஐ.ஐ.டி.யில் கணித உதவிப் பேராசிரியர். இவர் எழுதிய ஆராய்ச்சி நூல்கள் 26; சமர்ப்பித்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் 632. இவருடைய வழிகாட்டுதலுடன் கணிதத்தில் முனைவர் பட்டம் பெற்றவர்கள் 15 பேர்; முதுகலை ஆய்வறிக்கை சமர்ப்பித்தவர்கள் 51 பேர். இத்தகைய சிறப்புகளைக் கொண்ட வசந்தாவுக்கு மேலும் சிறப்பு சேர்க்கும் விதமாக கல்பனா சாவ்லா விருது கொடுத்து கௌரவித்திருக்கிறது தமிழக அரசு. துணிவு மற்றும் வீரதீரச் செயல்களுக்கு கொடுக்கப்படும் இந்த விருது, கணிதப் பேராசிரியருக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்த விதத்தில் அதற்குத் தகுதி பெறுகிறார் வசந்தா கந்தசாமி?

தரங்கம்பாடியிலுள்ள பேராயர் மாணிக்கம் லூதரன் கல்லூரியின் இணைப் பேராசிரியர் டாக்டர் பிரியகுமார். இவர் வசந்தா கந்தசாமியை வழிகாட்டியாக கொண்டு முனைவர் பட்டம் பெற்றவர்.

"நான் சாதாரண விவசாய குடும்பத்தில் பிறந்தவன். கிராமப்புற ஏழை மற்றும் தலித் மாணவர்களுக்கு ஐ.ஐ.டி. என்பது மிரள வைக்கும் புது உலகம். அங்கிருக்கும் சூழல் இந்த மாணவர்களை தாழ்வு மனப்பான்மைக்கு அழைத்துச் சென்று மன ரீதியிலான பாதிப்புகளைக் கொடுக்கும். இத்தகையோர்க்கு தன்னம்பிக்கை கொடுப்பவர்தான் வசந்தா கந்தசாமி. இன்றைய கணித உலகின் புதிய சிந்தனையான Fuzzy தியரி குறித்து பத்துக்கும் மேற்பட்ட புத்தகங்களை அவர் எழுதியிருக்கிறார். உலக அளவில் பாராட்டப்படும் கணித மேதையான அவருக்கு, உள்ளூரில் சரியான மரியாதை தரப்படவில்லை. இந்தியாவின் மிக உயர்ந்த பட்நாகர் அறிவியல் விருது அவருக்குக் கிடைக்கும் என்று எதிர்பார்த்திருந்தபோது, கடைசி நிமிடத்தில் அது தகுதியில்லாத ஒருவருக்கு வழங்கப்பட்டது பெரிய அதிர்ச்சி. பல சமயங்களில் கடுமையான மன உளைச்சலால் பாதிக்கப்பட்டும்கூட நலிந்த பிரிவினருக்காகத் துணிச்சலுடன் பாடுபடும் வசந்தா கந்தசாமிக்கு, கல்பனா சாவ்லா விருது கொடுத்தது முற்றிலும் சரியே!" என்கிறார் பிரியகுமார்.

"நான் முனைவர் பட்டத்துக்கு எடுத்துக்கொண்டது 'கோரிங் தியரி' என்ற பாடமாகும். வசந்த மேடம் போன்று மிகப் பொறுமையாகச் சொல்லிக் கொடுப்பவர்கள் மிகவும் குறைவு. அதிரடி குணமும், அதேசமயம் ஆழ்கடல் போன்ற அமைதியான மனமும் கொண்டவர்

அவர். ஒருமுறை இந்திய விண்வெளி அமைப்பினருக்காக ஓர் ஆராய்ச்சியைச் செய்தார் வசந்தா கந்தசாமி. முதலில் சிறிய அளவில் அதற்கு உதவி செய்த இஸ்ரோ, பிறகு பெரிய அளவில் செய்யும் நோக்கத்தில் ஐ.ஐ.டி.க்கு நிபுணர்களை அனுப்பி வைத்தது. ஆனால், கணிதத்துக்கும் விண்வெளிக்கும் என்ன தொடர்பு என்றெல்லாம் கூறி



• வசந்தா கந்தசாமி

இஸ்ரோவின் உதவி ஐ.ஐ.டி.யால் நிராகரிக்கப்பட்டது. பேராசிரியர் பதவிக்கு முற்றிலும் தகுதியான அவர், இன்னமும் உதவிப் பேராசிரியராகவே இருக்கிறார். நாம் அவரைச் சரியான முறையில் அங்கீகரிக்கவில்லை. தம் மீது தொடுக்கப்படும் தாக்குதல்களை, அசாத்தியத் துணிவுடன் எதிர்த்துப் போராடும் அவருக்கு, இன்னும் பல விருதுகள் காத்திருக்கின்றன'' என்கிறார் எஸ்.எஸ்.என். பொறியியல் கல்லூரி விரிவுரையாளரான டாக்டர் செல்வராஜ். இவரும், அடுத்து நம்மிடம் பேசிய வேலூர் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜியில் விரிவுரையாளராக இருக்கும் டாக்டர் ராஜதுரையும் வசந்தா கந்தசாமியின் மாணவர்களே.

"எல்லோருக்கும் சகல உரிமை வேண்டும், சமத்துவம் நிலவ வேண்டும் என்று முழுமூச்சுடன் செயல்படுபவர் வசந்தா கந்தசாமி. உலகம் போற்றும் கணித நிபுணராக இருந்தும் அடக்கமானவர். ஆழ்ந்த அறிவுதான் அவரது சொத்து. அவரது துணிச்சலும் தொய்வில்லாத போராட்டமும் பாராட்டத்தக்கவை. இவரது நிலையில் வேறொருவர் இருந்திருந்தால் பர்ஸின் கனத்தைக் கூட்டுவதற்காக வெளிநாட்டுப் பல்கலைக் கழகத்துக்குச் சென்றிருப்பார். ஆனால் இவர் தமக்கு வந்த வாய்ப்புகளைப் புறக்கணித்துவிட்டு இங்கேயே தொடர்ந்து பணியாற்றுவதற்கு நலிந்த, கிராமப்புற மாணவர்கள் மீதுள்ள ஈடுபாடுதான் காரணம். ஐ.ஐ.டி நிர்வாகம் இவரைப் பெருமைப்படுத்த வேண்டும். எதனாலும் தளர்வுற்றுப் போய்விடாமல் தொடர்ந்து பாடுபடும் அவருக்கு இவ்விருது மேலும் போராட்ட குணத்தையே ஊட்டும்'' என்கிறார் ராஜதுரை.

படம்: **ராஜன்**

❐ யுவராஜ்

நிறைய பால் குடித்த களைப்புடன் கைலாயத்தில் தமது அறையில் உறங்கிக் கொண்டிருந்த ஆனைமுகன், நித்திரை கலைந்து மெல்ல கண்களைத் திறந்தார். எதிரே மூஞ்சூறு நகத்தைக் கடித்தபடி அப்படியும் இப்படியுமாக நடந்து கொண்டிருக்கிறது.

"என்ன, காலையிலேயே பதற்றமாக இருக்கிறாய்?" என்று கேட்டார் பார்வதி புத்திரன்.

"பூலோகத்திலிருந்து எஸ்.எம்.எஸ், ஃபேக்ஸ் மூலமாக வந்துள்ள செய்திகளைப் படித்தால் நீங்களும் என்னை மாதிரிதான் இருப்பீர்கள்" என்றது.

"அப்படியென்ன செய்திகள்?"

"ஒன்றா? இரண்டா? தமிழ்நாட்டிலிருந்து ஆரம்பிக்கிறேன். இந்த விநாயகர் சதுர்த்திக்கு 'வீட்டுக்கு ஒரு விநாயகர்' என்ற திட்டத்தின் கீழ் உங்களை இலவசமாகக் கொடுத்திருக்கிறதாம் அரசு."

"நிஜமாகவா?"

"குறுக்கே பேசாமல் கேளுங்கள். சிலையை மட்டும் கொடுத்தால் போதாது. சுண்டல், கொழுக்கட்டைகளைச் செய்வதற்கான பொருட்களையும் இலவசமாகக் கொடுக்க வேண்டுமென..."

"புதிதாகச் சட்டமன்றத்தில் நுழைந்துள்ள கட்சியின் தலைவர் சொன்னாரா?"

"அட! எப்படி சரியாகச் சொன்னீர்கள்?"

"இதற்கெல்லாம் பெரிதாக அறிவு வேண்டுமா? எல்லாம் யூகம்தான். எதிர்கட்சிக்காரர்கள் ஏதாவது சொல்லி இருக்க வேண்டுமே!"

"ஆமாம்! மிகவும் சிறிய அளவு விநாயகரையே கொடுத்திருப்பதாகப் புகார். அதற்கு ஆளுங்கட்சித் தலைவர் சரியான பதிலடி கொடுத்திருக்கிறார்."

"அது என்ன?"

"ஒண்டுக்குடித்தனத்தில் வசிப்பவர்களுக்கு சிறிய விநாயகர்தான் சரியாக இருக்கும். பெரிதாகக் கொடுத்தால் அதை வீட்டில் வைத்துவிட்டு அவர்கள் வெளியே வந்தா படுத்துக் கொண்டிருக்க முடியும் என்று கேட்டதும் சட்டசபையில் ஒரே மேஜை தட்டல்தானாம்! உலகிலேயே நீண்ட நேரம் மேஜைகளைத் தட்டிய சம்பவம் என்று கின்னஸில் பெயர் வரப் போகிறதாம்."

"இதெல்லாம் நம்பகமான செய்திதானா?"



"அதை உறுதியாகச் சொல்ல முடியாது. அதே நேரம் இப்படி எல்லாம் நடக்க வாய்ப்பு இல்லை என்று ஒதுக்கவும் முடியாது. தமிழ்நாட்டில் எதுவும் நடக்க வாய்ப்புண்டு."

"சரி! தமிழ்நாட்டை விடு. மற்ற மாநிலங்களில் எப்படி?"

"வழக்கம்போல் உங்களை விதவிதமான வடிவங்களில் தெருவுக்குத் தெரு நிறுத்தி வைத்திருக்கிறார்களாம். குறிப்பாக, பிரதமரைப் போல் செய்து இருக்கிறார்களாம்."

"நினைத்தேன். இரண்டு, மூன்று நாட்களாகவே என் காதுகளில் யார் யாரோ ஏதேதோ சொல்லி மிரட்டுகிறார்கள். எல்லாவற்றுக்கும் என் தலை ஆடிக்கொண்டே இருப்பதைப் போன்ற பிரமை. ஏதோ ஊரில் என்னை கிரிக்கெட் வீரனைப் போல் வைத்திருக்கிறார்களாமே?"

"ஆமாம்! ஆனால் அங்கே ஒரு பக்கம் கடுமையான மழை; இன்னொரு பக்கம் அடிதடி. மற்ற கடவுள்களை எல்லாம் அப்புறப்படுத்தி விட்டார்கள். என்ன

# வீட்டுக்கு ஒரு விநாயகர்!

நடந்தாலும் விநாயகர் சிலை இங்கேதான் இருக்கும். அதற்குச் சரியான பாதுகாப்பு உள்ளது என்று சொல்லப்பட்டுள்ளது."

"அதானே, நான்தானே இளிச்சவாயன்? சரி! இந்த முறை என்னைக் கரைக்கும் பிரச்னை எப்படி இருக்கிறது?"

"அது ஆண்டுக்கு ஆண்டு பெரிதாகிக்கொண்டுதான் போகிறது. கடலிலோ, ஆற்றிலோ கரைக்காமல் வேறு வகையில் கரைப்பதற்கான திட்டம் தயாராகி வருகிறதாம்."

"வேறு வகையில் என்றால் எப்படி?"

"இதுவும் வதந்தியா, உண்மையா என்று தெரியவில்லை."

"பரவாயில்லை, சொல்."

"இட ஒதுக்கீடு போராட்டம் நடக்கும் இடங்களில் கொண்டுபோய் வைத்துவிடுவார்களாம். போலீசார் தடியடி நடத்தும்போது மாணவர்கள் கலைந்து ஓடுவார்கள் அல்லவா? அப்போது உங்கள் மீது முட்டி, மோதி உடைக்க வைக்கலாம். அவர்கள் மீது பீய்ச்சி அடிக்கும் தண்ணீரை உங்கள் மீதும் அடித்தால் ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடித்து போல் வேலை முடியும்."

"ஐயோ! அப்புறம்?"

"நட்வர்சிங்கின் வீட்டுக்குப் பின்புறம் ஒரு எண்ணெய்க் கிணறு இருக்கிறதாம். அதில் எவ்வளவு சிலைகளைப் போட்டாலும் உள்ளே அமுங்கி விடுமாம். அப்படியே வெளியே எட்டிப் பார்த்தாலும் தெளிவாக இருக்காதாம். ஆகவே அங்கே போடவும் ஆலோசனை நடக்கிறதாம்."

"பிறகு?"

"இதற்கெல்லாம் பி.ஜே.பி. கண்டனம் தெரிவித்துள்ளதாம். அத்துடன் வேறு ஆலோசனையும் சொல்லியுள்ளது. வெளிநாடுகளுடன் பேசி, ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, சிலைகளை அவர்களுக்குக் கொடுத்துவிட வேண்டுமாம். அவர்கள் தங்கள் நாட்டு கடல்களில் கரைக்க வேண்டுமாம். இதற்காக நிதி திரட்டப் போகிறதாம். தவிர..."

"போதும் நிறுத்து. எனக்குத் தலைச் சுற்றுகிறது. எதுக்குடா கண் முழிச்சோம்னு இருக்கு. நான் மறுபடியும் தூங்கப் போறேன்" என்ற பானை வயிற்றான் பக்கவாட்டில் படுத்துக்கொண்டு விட்டார்.

பாவம் மூஞ்சூறு! மீதமுள்ள செய்திகளை யாரிடம் சொல்வதெனத் தெரியாமல் தவிக்க ஆரம்பித்தது. ○



"கலர் டீ.வியைச் சீதனமாக் கேட்டாங்கன்றதுக்காக உங்க பொண்ணைக் கல்யாணம் செஞ்சு தர மாட்டேன்னு சொல்லிட்டீங்களா... ஏன்?"

"டீ.வியைச் சீதனமாகக் கேட்கிறவங்க எப்படி என் பொண்ணைக் கண்கலங்காம வெச்சுப்பாங்க... அதான்...!"

- திருவாரூர் ராம்சுப்ரமணி





"இது ரொம்ப ஓவர் கமலா!"

"எது?"

"எங்கம்மா ஊருக்குப் போன பிறகும் வழக்கமா அவங்க உட்கார்ற சோபாவை நீ முறைச்சுக்கிட்டே இருக்கிறது."

- உ. ராஜாஜி

# ரொம்ப ஓவர்!

"மைக்ல முதலுதவிப் பெட்டி தொங்குதே... எதுக்கு?"

"கட்சில கோஷ்டிப்பூசல் அதிகமா இருக்கே!"

- அம்பைதேவா







"உங்க பையனுக்கு இரும்பு மனசுன்னு சொன்னீங்க. அப்புறம் எப்படி ஒரு பொண்ணை லவ் பண்ணினாரு?"

"அந்தப் பொண்ணுக்குக் காந்தக் கண்களாம்."

- சி.பி. செந்தில்குமார்



"சம்மர் லீவ் முடிஞ்சு ஜூன் மாசத்துல ஸ்கூல் திறக்கறது எப்பவும் நடக்கறதுதானே... அதுக்கு ஏன் தலைவர் கோபப்படறாரு?"

"இத்தனை ஸ்கூல் திறக்குதே, ஒரு ஸ்கூலாவது திறப்பு விழாவுக்குக் கூப்பிடுதான்னு கேட்கிறார்."

- சி.பி. செந்தில்குமார்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** மகிழ்ச்சிகரமான வாரம். பொருளாதாரம் நன்றாக இருக்கும். உடல்நிலையில் கவனம் செலுத்தவும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வீடு/மனை வாங்க ஏற்ற தருணம். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். திருமணக் காரியம் கைகூடும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். நல்ல மாறுதல் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். மனச்சலனம் போகும். வெளிநாட்டு வேலைவாய்ப்பு வந்து சேரும். ஆஞ்சநேயருக்கு நெய் விளக்கு ஏற்ற நற்பலன் கிடைக்கும்.

**ரிஷபம்:** பூர்வீகச் சொத்தில் பாகப் பிரிவினை ஏற்படும். நெருங்கிய நண்பர்/உறவினர் உங்களை விட்டு விலகிச் செல்ல நேரிடும். குழந்தைகளைப் பற்றின மனக்கவலை தீரும். திருமணத் தடை விலகும். உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படும். பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். உத்தியோகத்தில் வேலைப்பளு இருக்கும். வியாபாரத்தில் சற்று முற்போக்கான சூழ்நிலை தென்படும். கணவன், மனைவிக்குள் ஒத்துப்போவது நற்பலனைத் தரும். எதிர்பாராத பிரயாண வாய்ப்பு வந்து சேரும். குரு/ராகு/கேது வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**மிதுனம்:** நல்லது நடக்கும். நினைத்த காரியம் கைகூடும். வீடு/மனை வாங்குவீர்கள். பணக்கஷ்டம் விலகும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் நடக்கும். தூரதேச அழைப்பு வந்து சேரும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலை மாற்றம் உண்டாகும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிடைக்கும். கொடுக்கல், வாங்கல் நற்பலனை அளிக்கும். ராகு/கேது வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**கடகம்:** தெய்வ அனுகூலம் ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். பண வரவு ஏற்படும். உடல்நிலை நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி கைகூடும். நீண்டதூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். மன சஞ்சலம் விலகும். குரு/சனி வழிபாடு செய்துவர, நற்பலன் அடைவீர்கள்.

**சிம்மம்:** சற்று முன்னேற்றமான வாரம்.



* படம்: ஸ்ரீஹரி

வராத பாக்கி வசூல் ஆகும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போகவும். நெருங்கிய நண்பர்/உறவினரை விட்டு விலக நேரிடும். கூட்டுத் தொழில் செய்பவருக்கு மனக் கவலை ஏற்படும். வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். ஜாமீன் போடுவது, கடன் கொடுப்பதைத் தவிர்க்கவும். வாகனத்தில் போகும்போது கவனம் செலுத்தவும். உடல் நிலையில் கவனம் தேவை. வேலைப்பளு

## 3.9.2006 முதல் 9.9.2006 வரை

இருக்கும். அவசரப்பட்டு இடமாற்றம் செய்யக்கூடாது. வரவுக்கு மேல் செலவு இருந்தவண்ணம் இருக்கும். திருமணத் தடை விலகும். ராகு/கேது/குரு/சனியை வழிபட்டு வருதல் நற்பலனைத் தரும்.

**கன்னி:** மன உளைச்சல் இருக்கும். குடும்ப வாழ்க்கையில் அனுசரித்துப் போகவும். வேலைப்பளு அதிகரிக்கும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். உடல் நிலையில் சற்று நலிவு ஏற்படும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். திருமணக் காரியம் கைகூடும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்படும். பணப் பற்றாக்குறை போகும். கல்வி வளம் மேலோங்கும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் உண்டு. எதிலும் ஆழ்ந்து யோசித்து முடிவு எடுப்பது நற்பலனைத் தரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் அடைவீர்கள். ராகு/கேதுவை வழிபட்டு வருதல் நலம் தரும்.

**துலாம்:** தரித்திரமும், பீடையும் விலகும் வாரம். சுப காரியம் கைகூடும். உத்தியோகத்தில் மாற்றம் வரும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல சுறுசுறுப்பு ஏற்படும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை விலகும். வழக்கு வியாபாரம் வெற்றி கொள்ளும். வீடு/மனை வழியில் ஆதாயம் ஏற்படும். நண்பர்/உறவினர் வழியில் நன்மை உண்டாகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் கிட்டும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். திருமணம் நடக்கும். குரு/சனியை வழிபட்டு வருதல் நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்:** பொருளாதார பலம் பெருகும். பத்திரிகைகளில் பெயர் வரும். குடும்பத்தில் திருமணம் நடக்கும். வெளிநாட்டுக்குச் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகளால் மனசந்தோஷம் கிட்டும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். சத்ரு தொல்லை விலகும். பணப் பற்றாக்குறை இருக்காது. வாக்கு வன்மை, தனம் மேலோங்கும். வியாபாரத்



தில் நல்ல லாபம் ஈட்டுவீர்கள். உத்தி யோகத்தில் நற்பெயர் ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். குரு/ராகு/கேது வழி பாடு செய்து வருதல் நலம்.

**தனுசு:** பொன்னான வாரம். உடல் நிலை நன்றாக இருக்கும். எதிர்பார்ப்புகள் நடக்கும். திருமணக் காரியம் கைகூடும். வேலையில் நற்பெயர் கூடும். ஊதிய உயர்வு ஏற்படும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். தொலைதூர அழைப்பு வரும். புதிய தொழிலில் வெற்றி கைகூடும். கண வன், மனைவி உறவு நன்றாக இருக்கும். எதிர்ப்புகள் விலகும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். வழக்கு வெற்றி பெறும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நலம்.

**மகரம்:** சிக்கல்கள் தீரும் வாரம். பண வரவு உண்டு. [illegible]ப வாழ்வும், உடல் ஆரோக்கியமும் நன்றாக இருக்கும். தெய்வ அனுகூலம் ஏற்படும். மகான்களின் சந்திப்பு ஏற்ப[illegible] தந்தையார் உடல்நிலை பாதிக்கப்பட[illegible] குழந்தைகளால் மன சந்தோஷம் கி[illegible]ம். வியாபாரத்தில் நல்ல முன்னேற்[illegible]ாண்பீர்கள். வழக்கு வெற்றி [illegible]ம். வீடு மாற்றம் உண்டா கும். புதிய பதவி கிட்டும். குரு/சனி வழிபாடு செய்து வருதல் ந[illegible]ரும்.

**கும்பம்:** மனக்கஷ்டப் [illegible]ணக்கஷ்டமும் விலகும். குடும்ப[illegible]வில் அனுசரணை தேவை. ஆ[illegible]ள, வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். தொலைதூரப் பிரயாண வாய்ப்பும் நல்ல வேலைவாய்ப் பும் வீடு தேடி வரும். தொழில்துறையில் இருக்கும் சங்கல்பம் போகும். வேலையில் தொந்தரவுகள் விலகும். சிலருக்கு வீடு/வேலை மாற்றம் உண்டாகும். உடல்நிலை சுமாராக இருக்கும். தடைபட்டு வந்த காரியம் உடன் கைகூடும். திருமணம் நடக்கும். வாகனத்தில் செல்லும்போது எச்சரிக்கை தேவை. ராகு/கேது வழிபாடு செய்து வரவும்.

**மீனம்:** பொருளாதார மாற்றம் காண் பீர்கள். புதிய பொறுப்புகள் ஏற்கும் சூழ் நிலை வரும். கணவர், மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நற்பயனை அளிக் கும். உடல்நலத்தில் கவனம் செலுத்தவும். சுபநிகழ்ச்சி கைகூடும். நீண்டகால நிலு வைகள் வசூலாகும். திருமணத் தடை வில கும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வேலைப்பளு அதிகரிக்கும். இடமாற்றம் ஏற்படலாம். மனக்கசப்பு போகும். பணவரவு செழிப்பாக இருக்கும். வழக்கு வெற்றி பெறும். ராகு/குரு/சனி/ கேது வழிபாடு நலம் தரும்.

**என் மகளுக்கு எப்போது வேலை கிடைக்கும்? கிடைக்கும் வேலை நிரந்தரமாகுமா?**

**- மாலதி ரங்கசாமி, கோட்டூர்**

உங்கள் மகளுக்குச் சுக்ரதசை நடக்கிறது; 20.09.2006க்குப் பிறகு, உடன் வேலை கிடைக்கும். மனசந்தோஷம் கிடைக்கும். வெளிநாட்டு வேலை நிரந்தரமாக அமையும்.

**என் சகோதரி மகளுக்குத் திருமணம் தடையாகிக் கொண்டு இருக்கிறது. எப்போது அவளுக்குத் திருமணம் நடக்கும்?**

**- பெரி. சுப்பிரமணியம், கோயமுத்தூர்**

ஜாதகருக்கு 32 வயதில் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்குப் பத்து மைல் தொலைவில் பிறந்த, தொழில்துறையில் படித்த வரன் அமையும். உடன்பிறப்பு இருவர் உள்ள இடம். பரிகாரம் தேவை இல்லை.

# "சேர்ந்தா ஜெயிக்கலாம்!"

❐ விக்டர் மனோ

இது நவராத்திரி நேரம். பூஜைக்குத் தேவையான பொருட்கள் அனைத்தும் ஒரே இடத்தில் கிடைத்தால், அதைவிட வேறு மகிழ்ச்சியில்லை இல்லத்தரசிகளுக்கு.

"மஞ்சள், குங்குமத்தில் தொடங்கி, சுவாமி அலங்காரப் பொருட்கள், அம்மன் பாவாடை, க்ரீடம், நெஞ்சுப்பட்டை, மரப்பாச்சி பொம்மை, அலங்கார மாலைகள், மின்சார தீபம், சொம்பு, மண்டபம், ஒயிட் மெட்டல், ஹாண்டி கிராஃப்ட், அன்பளிப்புப் பொருட்கள் என்று எந்தவொரு பொருளுக்கும் எங்கெங்கோ அலைய வேண்டாம். எல்லாம் ஒட்டுமொத்தமாய் எங்களிடமே இருக்கின்றன" என்கிறார் மைலாப்பூர் வடக்கு மாட வீதியிலிருக்கும் விஜயா ஸ்டோர்ஸ் உரிமையாளர் முத்து. கடந்த முப்பது வருடங்களாக மேற்கண்ட பொருட்களை விற்பதில் முன்னணியில் இருக்கிறது விஜயா ஸ்டோர்ஸ். தமது நிறுவனத்தின் பின்னணி பற்றிப் பேசும் போது முத்துவின் முகத்தில் எல்லையில்லா பெருமிதம்.

"திருச்செந்தூர் பக்கத்துல நாதன் கிணறுங்கிற கிராமத்திலிருந்து சென்னைக்கு வந்து பிழைச்சவர் எங்க அப்பா செந்தில் வேலாயுதம். ஒரு கடையில் உதவியாளரா தன்னோட வாழ்க்கையைத் தொடங்கினவரு. முன்னுக்குவர பட்ட கஷ்டங்கள் கொஞ்சநஞ்சமல்ல. மாசச் சம்பளத்திலேர்ந்து சிறுகச் சிறுகச் சேர்த்து வச்சுத்தான் இந்த விஜயா ஸ்டோர்ஸை ஆரம்பிச்சாரு. அவரோட அதீத உழைப்பால இன்னைக்கு அது ரெண்டாயிரம் சதுர அடியில நவீனமா மாறி நிக்குது. 'கடையைப் பசங்க பாத்துக்குவாங்க... நமக்கு வயசாயிடுச்சு'ன்னு நினைக்கறவரில்ல எங்க அப்பா... இந்த எழுபத்திரண்டு வயசுலயும் ஓடியாடி உழைச்சிட்டிருக்கார்" என்று கூறும் முத்துவுக்கு மூன்று சகோதரர்கள். மூத்தவர் ராஜா மற்றும் இளைய சகோதரர்



* சகோதரர்களுடன் முத்து...

"இருட்டுல, என் மனைவி போல தெரிஞ்சதால, உங்க பையைத் தூக்கிக்கிட்டுப் பின்னாடியே வந்துட்டேன், ஸாரி!"

"ஸாரி.. நானும் என் கணவன்னு நினைச்சுக்கிட்டு, வழியெல்லாம் உங்களைத் திட்டிக்கிட்டே வந்துட்டேன்."

- ஜெயேந்திரன்



சரவணன் இருவருக்கும் கூட இதே தொழில்தான். கடைசி தம்பி கணேசன் மட்டும் ஆடிட்டர்.

"நம்பிக்கையா எங்ககிட்ட வர்றவங்கள நாங்க என்னைக்கும் வெறுங்கையோடு அனுப்பினதில்ல. 'நல்ல நாள், பெரிய நாளுக்கு விஜயா ஸ்டோர்ஸ் போனா குறைஞ்ச விலைல நல்ல பொருட்களை வாங்கலாம்'னு வாடிக்கையாளர்கள் சொல்ற அளவுக்கு நடந்துக்கறோம். எல்லா பொருட்களையும் ஆந்திரா, கேரளா, குஜராத், உபின்னு வெளி மாநிலங்கள்லருந்து நேரிடையா இறக்குமதி பண்றதால எங்களால மத்தவங்களவிட விலை குறைவா விக்க முடியுது. விலை குறைச்சல்ங்கறதுக்காக தரத்துல நாங்க என்னைக்கும் காம்ப்ரமைஸ் பண்ணிக்கிறதில்ல.

ஒரு வியாபாரத்தோட சக்ஸஸ், கஸ்டமர்கள்கிட்ட நாம பழகுறதுல தான் இருக்குது. எங்ககிட்ட வர்றவங்களை எங்க வீட்ல ஒருத்தராத்தான் நாங்க கருதறோம். முகம் சுளிக்காம பேசறதுலேர்ந்து, வழியனுப்பி வைக்குற வரைக்கும் அவங்களோட திருப்தியைத் தான் முதன்மையானதா நினைக்கிறோம். இதுக்காகவே எங்க ஊழியர்களுக்குத் தனித்தனியா பயிற்சியளிக்கிறோம்" என்று கூறும் முத்து, சகோதரர்கள் பற்றிப் பெருமையாகப் பேசுகிறார்.

"நாங்க அண்ணன், தம்பிங்க நாலு பேரும் ஒத்துமையா இருந்து உழைச்சது வீண் போகலைங்க. என்னதான் கஷ்டப்பட்டாலும் அடிப்படையில ஒற்றுமை இல்லைன்னா எல்லாமே வீண்தானே... அந்த விதத்துல எங்களுக்குள்ள எந்தவிதமான ஒளிவு மறைவுமில்லாம, முன்னேற்றம் ஒண்ணையே குறிக்கோளா வச்சி செயல்படுறோம். சேர்ந்திருந்தா ஜெயிக்கலாம்ங்கறதுக்கு நாங்க நல்ல உதாரணம்" என்கிறார்.

நவராத்திரி என்றில்லை... வரலட்சுமி நோன்பு, கிருஷ்ண ஜயந்தி, விநாயகர் சதுர்த்தி என்று எல்லா விசேஷ நாட்களுக்குமான பொருட்கள் விஜயா ஸ்டோர்ஸில் கிடைக்கின்றன. இந்த நாட்களில் கடையில் நிற்கக்கூட இடமில்லாத அளவு கூட்டம் அலை மோதுமாம். பல சமயம் நிர்ணயித்த நேரத்தைவிட அதிகளவு வேலை செய்திருக்கிறார்களாம். டிசம்பர் சீசனிலும் இங்கு விசேஷம்தான். பரதநாட்டியத்துக்குத் தேவைப்படும் பொருட்களை அட்வான்ஸாக புக் செய்து வாங்குவோரும் உண்டாம். இங்கு வந்து, கேட்டது கிடைக்காமல் வெறுங்கையோடு யாரும் திரும்பியதாகச் சரித்திரமில்லையாம். இதனை ஒரு குறிக்கோளாக ஏற்றுச் செயல்படுகிறார்களாம் அண்ணன், தம்பி நால்வரும்.

"பின்னே, வர்றவங்களோட மன நிறைவுதானே எங்கள நிம்மதியா தூங்க வைக்கும். இப்போ வாடிக்கையாளர்கள் வாங்கும் பொருள்களின் மதிப்புக்கேற்ப இலவசங்களையும் வழங்கறோம். இதுக்கு நல்ல ரெஸ்பான்ஸ் இருக்கு. அடுத்து நாலாயிரம் சதுர அடியில இன்னொரு கடையை நிறுவுற ஐடியாவும் இருக்கு. எல்லாத்துக்கும் அடிப்படை உழைப்பு, நம்பிக்கை, தரம்... இந்த மூணும் எங்ககிட்ட எப்பவும் நிரந்தரம்" என்கிறார் விஜயா ஸ்டோர்ஸ் முத்து.

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**

கு.ஞானசம்பந்தன்



விழாவுக்கு வந்திருந்த வி.கே.ராமசாமி, பிற்பகல் இரண்டு மணி வரை, நான்கு மணி நேரம் இருந்து ரசித்தார். குழந்தைகள் சொன்ன நகைச்சுவைக்குப் பயங்கரமாகச் சிரித்தார்.

தம் இளவயது கஷ்டங்களை, நாடக அனுபவங்களை அவர் சிரிக்கச் சிரிக்கச் சொன்னபோது, அந்த மருத்துவமனையே நோயை மறந்து சிரித்தது.

'உங்களுக்குப் பிடித்த, மறக்க முடியாத காட்சி ஒன்றைச் சொல்லுங்கள்' என்று ஒருவர் கேட்க, "அது நெறைய இருக்குங்க" என்றபடி சொல்ல ஆரம்பித்தார்.

"மாட்டுக்கார வேலன் படத்தில் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். இரட்டை வேடத்தில் நடிப்பாரு. அதுல ஒரு காட்சியில என் மனைவியா நடிக்கிற எஸ்.வரலட்சுமி, 'என்னங்க, இங்க வந்து மாட்டுக் கொட்டத்துல அதிசயத்தைப் பாருங்க' என்று அவசரமாகக் கூப்பிடுவார்.

நான் உடனே வேகமாக ஓடியபடி 'மாட்டுக் கொட்டத்தில் அதிசயமா? ஏகநாதர் மறுபடி பிறந்துவிட்டாரா?' என்று சொந்த வசனமாகப் பேசியதும், எம்.ஜி.ஆர். உட்பட அனைவரும் குபீர் என்று சிரிக்க, அந்த வசனத்தை அப்படியே அதில் பேசச் சொல்லிவிட்டார் எம்.ஜி.ஆர்." என்றார் வி.கே.ராமசாமி.

# விடாதே.. பிடி..!

ஒரு நாள் காலை சினிமாமணி சில பேப்பர்களைக் கையில் எடுத்தபடி எங்கள் வீட்டுக்கு வந்தான். மொட்டை மாடியில் ஒரு சிறிய கட்டிலைப் போட்டு ஒரு பயங்கர மர்ம நாவலை நான் படித்துக் கொண்டிருந்தேன்.

'டேய்' என்று அவன் ஒரு சத்தம்






35

சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

போட, மர்ம நாவல் கொலை காரனே நேரே வந்துவிட்டதாக நான் அரண்டு போனேன்.

"நான்தாண்டா மணி. இங்க பாரு, இப்பெல்லாம் நம்ம ஊர்ப் பெண்களை அரபு நாடுகளுக்குக் கடத்திட்டுப் போய் விலைக்கு வித்துர்றாங்களாம்... இந்த பேப்பர் பூரா அந்த நியூஸ்தான். பேசாம இத வச்சு நாம ஒரு நாடகம் போட்டா என்ன?" என்றான்.

"போடா, போ... ஒரு கதாநாயகியாகப் பெண் வேஷம் போடவே ஆள் இல்லையாம்... இதெல்லாம் நடக்காது."

"இல்லடா... நடக்கும். ஒரு அப்பா, அம்மா, அஞ்சு பெண்கள். கடத்திட்டுப் போக வந்த அரபு ஷேக் யாரைக் கடத்து றான் தெரியுமா?"

"கடைசிப் பெண்ணைத்தானே?" என்றேன் நான்.

"இல்ல... அந்த அஞ்சு பேரோடு அம்மாவை... அந்தக் குடும்பமே அவங்களைத் தேடி அலையுது. நாடகம் பேர் என்ன தெரியுமா?"

'விடாதே... பிடி...' என்று நாடகத்தின் தலைப்பை மணி சொன்னவுடன் எனக்குள் ஒரு விறுவிறுப்பு ஏற்படத் தொடங்கியது. எங்கள் நாடகக் குழு விரைவாகச் செயல்படத் தொடங்கியது.



"பாட்டி, அழுகையை நிறுத்துங்க!"
"ஏண்டா, நான் தாலாட்டு பாடினாத்தான் குழந்தை அழுகையை நிறுத்தும்!"
"நான் குழந்தை அழுகையைச் சொல்லலை!"
- ஆ. பூவராகன்

நான் கதை, வசனம் எழுதத் தொடங்கினேன்.

முத்துராக்கு அரங்கம் அமைக்க, ஒப்பனை செய்ய, ஓடியாடத் தொடங்கினார்.

ஐந்து இளம் பெண்களுக்குப் பாவாடை, தாவணி, தேடி வாங்குவதற்குள் சினிமாமணி பெரும் பாடுபட்டுப் போனான்.

'கடத்தப்பட்ட பெண்ணின் கதி என்ன? துப்பறியும் சிங்கம் துபாய் போனாரா? காணத் தயாராகுங்கள்! விடாதே... பிடி! நாடகம்...' என்று ஒரு மாதத்துக்கு முன்பாகவே திடுக்கிடும் விளம்பரத் தட்டிகளை எழுதி ஊர் முழுக்கப் பரபரப்பை ஏற்படுத்தினார்கள் எங்கள் நண்பர்கள்.

ஐந்து பெண் குழந்தைகளின் பாசமுள்ள தந்தையாக நண்பர் ஆவுடையப்பனும், பெண்களைக் கடத்தும் துபாய் ஷேக்காக நாகமூர்த்தியும், இவரை விரட்டிப் பிடிக்கும் 'துப்பறியும் சிங்கமாக' நானும், எனது உதவியாளராக சின்னக் கருப்பையாவும் நடிக்கத் தயாரானோம்.

பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்புப் படிக்கும் ஐந்து மாணவர்களை (எங்கள் நண்பர்களின் தம்பிகள், உறவினர்கள்) ஒரே உயரமாக, பெண்களாக நடிக்கத் தேர்ந்தெடுத்து, அவர்களின் தாயாக, கடத்தப்படும் கற்புக்கரசியாக நண்பர் கோபாலை நடிக்க வைக்க சினிமா மணியும், முத்துராக்கும் பெரு முயற்சி செய்தார்கள்.

நாடக ஒத்திகையின்போது பெண்களாக நடிக்கும் ஆண்கள் சற்றே பெண் குரலில் நளினமாகவும், உச்சரிப்பில் தெளிவாகவும் இருக்க வேண்டும் என்பதற்காக முத்துராக்கு, கண்ணாம்பா, சாவித்ரி, எம்.என்.ராஜம் போன்ற நடிகைகளின் வசன உச்சரிப்பைத் தட்டுத்தடங்கலின்றிச் சொல்லி நடித்துக் காட்டினார்.

ஆண்கள் பெண் வேடம் போடும்போது சில சிரமங்கள் உண்டு. குரலை மாற்றி மென்மையாகப் பேசினால் உடம்பு ஒத்துழைக்காது, உடம்பு வளைந்தால் குரல் கட்டையாகி விடும். அதிலும் ஒரு பையன் பாவா டையைக் கைலி மாதிரி மடித்துக் கட்டிக்கொண்டே மேடைக்கும் வந்து விட்டான்.

விளம்பரத்தால் வந்த கூட்டமா அல்லது 'கன்னிப் பெண்களை'க் காண வந்த கூட்டமா என்று தெரியாதபடி

# ஒலி கேட்க வழி காட்டுங்கள்!



எனது மகள் **Md.நர்கிஸ் பாத்திமா** வயது 3. இவர் பிறவியிலேயே காது கேட்கவில்லை. அதனால் வாய் பேச இயலவில்லை. இதனை Cochlear Implantation என்ற அற்புத கருவியை அறுவை சிகிச்சை செய்து பொருத்த **பத்மஸ்ரீ டாக்டர் மோகன் காமேஸ்வரன்** அவர்கள் பரிசோதனை செய்து சம்மதித்துள்ளார். அதற்கு ரூபாய் 10,50,600 (ரூபாய் பத்து லட்சத்து ஐம்பதாயிரத்து அறுநூறு வரை) செலவாகும் என (MADRAS ENT RESEARCH FOUNDATION CHARITABLE PVT. LTD., RAJA ANNAMALAIPURAM, CHENNAI - 28) மருத்துவர்கள் மதிப்பிட்டுள்ளார்கள். ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த என்னால் இவ்வளவு தொகை செலவு செய்து சிகிச்சை மேற்கொள்ள இயலாது. எனவே உதவும் நல் உள்ளம் கொண்ட தாங்கள் என் குழந்தையின் எதிர்கால வாழ்வினைக் கருத்தில் கொண்டு என் குழந்தையின் வாழ்வில் ஒளியேற்றி வைத்திட வேண்டுமாய் மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

**MADRAS ENT RESEARCH FOUNDATION CHARITABLE TRUST - A/C MD.NARKEEYS FATHIMA**

என்ற பெயரில் A/c Payee Cross செய்த காசோலையின் மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறேன்.

**A.முகம்மது சபிக், 7/86, நேதாஜி நகர், கோட்டக்கரை, கும்மிடிப்பூண்டி - 601 201.**
**திருவள்ளூர் மாவட்டம், தமிழ்நாடு. செல்பேசி : 9894281002**

நன்கொடைக்கு 80G பிரிவின் கீழ் வருமான வரிவிலக்கு உண்டு என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**A.முகம்மது சபிக்**

Advt


நாடகம் தொடங்குவதற்கு முன்பாகவே மைதானம் நிரம்பி வழிந்தது.

முதல் காட்சியில் அம்மாவும், ஐந்து பெண்களும், தண்ணீர்க் குடத்தோடு மேடையில் தோன்றி நடக்க, 'கட்டோடு குழலாட ஆட, கண்ணின்ற மீனாட ஆட' என்று பின்னணியில் பாட்டு ஒலிக்க, கைதட்டலும், சீட்டி ஒலியும் ஊரையே கலங்கடித்தன.

ஐந்து பெண்களும் குஞ்சம் வைத்த சடையும், குலுங்கி நடந்த நடையுமாக வந்து குடங்களை நடுவே வைத்து ஒரு கும்மிப் பாட்டும் பாடி ஆடத் தொடங்கினார்கள்.

அம்மா பாட, பெண்கள் ஆட, துபாய் ஷேக் இந்தக் கண்கொள்ளாக் காட்சியால் மனதைப் பறிகொடுத்து அடுத்த சீனில் அம்மாவைத் தூக்கிக் கொண்டு ஓட, தாயைப் பிரிந்த பெண்களைப் பிடித்துக் கொண்டு அப்பா, திரிசூலம் சிவாஜி மாதிரி 'சுமதி, நீ கலகலன்னு சிரிச்ச, கொளகொளன்னு குழம்பு வைப்பியே... எங்கம்மா போன...' என்று கதறி அழுத போது மேடையில் இருந்த நடிகர்கள் உட்பட, சிரிக்காதவர்கள் யாருமில்லை.

"நம்ப குடும்பத்தைக் காப்பாத்த, என் தெய்வத்தைக் கண்டுபிடிச்சுக் குடுக்க இந்த ஊரிலே யாருமே இல்லையா? இல்லையா? இல்லையா? (எதிரொலி டெக்னிக் உபயம்: சினிமாமணி)" என்று கேட்டவுடன் "ஏன் இல்லை... துப்பறியும் சிங்கம் இருக்கிறார்" என்று ஆடியன்ஸ் மத்தியில் இருந்து நாலாபுறமும் குரல்வர *(எல்லாம் எங்கள் ஏற்பாடுதான்)*...

கறுப்பு கோட், கறுப்புக் கண்ணாடி, கறுப்புத் தொப்பியோடு, நான் மேடைக்கு வர, ஆர்மோனியம், தபேலா, டோலக் போன்ற இசைக்கருவிகள் எல்லாம் கோரஸாக ஒலிக்க, மேடையில் என் மீது மட்டும் ஒரே ஒரு லைட் அடிக்க... என்ன சொல்லட்டும் போங்கள்... பெரிய வரவேற்புதான்.

நாடகத்துக்கிடையில் பெண்களாக நடித்த பையன்களுக்கு மாலைபோட ஒரு கூட்டமே காத்திருந்தது. ஆனால்...

*(ரீல் சுற்றும்)*

படம் : **புதூர் சரவணன்**

● பி. இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

? வெற்றிகரமான ஐம்பதாவது நாள், நூறாவது நாள் என்று சினிமா விளம்பரம்போல் ஆட்சியாளர் ஆளும் தங்கள் அரசின் நூறாவது நாள் சாதனையை விளம்பரம் செய்கிறார்களே...?

! நூறு நாட்கள்வரை விமர்சனம் தவிர்த்து, ஆட்சியின் நூறாவது நாளையொட்டி, ஓர் அரசின் செயல்பாடுகளை விமர்சித்து, எடை போட்டு, ப்ரோக்ரஸ் ரிப்போர்ட் தருவது பத்திரிகையுலக மரபு. அரசே தனது சாதனைகளை விளம்பரப்படுத்திக் கொள்வது இன்றைய அரசியல் நடைமுறை.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'விடுதலைப் புலிகளை ஆதரிப்பதற்காக வைகோ தேசப் பிரிவினைக் கருத்துகளைப் பேசினார்' என்ற விவகாரத்தில், சட்டசபையில் தி.மு.க - காங்கிரஸிடையே மனவருத்தம் தொடர வாய்ப்பு உண்டா?

! இந்த ஒரு விஷயத்தில் மட்டும்தானா? இன்னும் எத்தனையோ விஷயங்களில் காங்கிரசுக்கு மன வருத்தம் உண்டு; தொடரும். ஆனாலும் உறவு பாதிக்கப்படாது. மத்திய - மாநில ஆட்சி 'கூட்டணி ஃபார்முலா' அப்படி அமைந்திருக்கிறது.

● ஆர். ராஜதுரை, சீர்காழி

? பத்திரிகைத் துறைகூட இடஒதுக்கீடு தர வேண்டும் என்கிறாரே ராமதாஸ்?

! அடுத்தாற்போல் பத்திரிகையின் பக்கங்களிலும் இட ஒதுக்கீடு சட்டம் வரும்! ஹய்யோ பாவம், ஆசிரியர்! 'பத்திரிகைச் சுதந்திரம்' அரசியல் சாசனத்தில் மட்டும் நீடிப்பானேன்? அதையும் ஒழித்துக்கட்டி விடலாம்!

* ஒதுக்கீடு உத்வேகம்!



* அரசியல் நடைமுறை

● க.மு. சுந்தரம், சிவமலை

? மூன்றே ரூபாய் கட்டணத்தில் விமானத்தில் பறக்கலாம் என்றால், போக்குவரத்துச் சேவையில் புரட்சி ஏற்பட்டுள்ளது என்று எடுத்துக் கொள்ளலாமா?

! இல்லீங்க! கடன் தருவதில் புரட்சி! மூன்று ரூபாய் என்பது முன்பணம்தான்.

● தி. ரங்கசாமி, மதுரை - 16

? சமீபகாலமாக, அமெரிக்கா காலடி

வைத்த நாடுகளில் தீவிரவாதம் தலைதூக்குவது ஏன்? உலகில் தீவிரவாதம் வளர அமெரிக்காவின் கொள்கையும் ஒரு காரணம் எனக் கருதலாமா?

! தீவிரவாதம் தலை தூக்கியதால் அமெரிக்கா தலையிட்டதா அல்லது அமெரிக்கா தலையிட்டதால் தீவிரவாதம் ஓங்கியதா? நெய்க்குத் தொன்னை ஆதாரமா? தொன்னைக்கு நெய் ஆதாரமா? ஒன்று நிச்சயம்: போர் தொடுத்து பயங்கரவாதத்தை ஒழிக்க முடியாது. இது நிரூபணமான விஷயம். மாற்று வழிகள் உள்ளன. அவற்றைத்தான் யோசிக்க வேண்டும்.

● உமரிபொ. கணேசன்,
மும்பை - 37

? இலவச திட்டங்கள் எல்லாம் ஏமாற்றுத் திட்டங்கள் என்று ஜெ. கூறுகிறாரே?

! உண்மை. மக்கள் செலுத்தும் வரிப்பணத்திலிருந்துதான் இலவசங்கள் வாரி வழங்கப்படுகின்றன. அதனால் சொல்கிறார். ஆனால், அவரது ஆட்சியிலும் இலவசங்கள் பெருக்கெடுத்து ஓடினவே! "நான் ஆட்சிக்கு வந்தால், நான் அறிவித்ததுடன் கருணாநிதி இன்று அறிவிக்கும் இலவசங்களையும் சேர்த்து கொடுப்பேன்'' என்று பிரசாரம் செய்தவர் தானே?

* படிப்பது ராமாயணம்...



● என். கோதண்டராமன்,
மதுராந்தகம்

? அனுமதியின்றி கட்டப்பட்ட கட்டங்களை இடிக்க நீதிமன்றம் உத்தரவிட்டிருக்கிறதே; இவ்வாறவது கட்டட உரிமையாளர்கள் திருந்துவார்களா?

! இது ஏதோ ஒரு சில கட்டடங்களைப் பற்றிய விவகாரம் என்று நினைக்கக்கூடாது. கட்டட உரிமையாளர்கள், ஃப்ளாட் கட்டும் ப்ரமோட்டர்கள் மட்டுமின்றி பொதுமக்களும் விழிப்படைய வேண்டும். கடன் வாங்கிக் கஷ்டப்படப் போகிறவர்கள் அவர்கள்தான்!

# உரிமையாளர்கள் திருந்துவார்களா?

● எம். பிரியதர்ஷினி,
பொறையார்

? பாலியல் குற்றங்கள்

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
தி. ரங்கசாமி,
ஸ்ரீ கோகுலம்,
3, 4வது குறுக்குத் தெரு,
போக்நகர்,
மதுரை - 625 016

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
வி.ஆர். கிருஷ்ணன்,
31/1990,
சட்டயப்ப வாத்தியார் சந்து,
மானோஜியப்ப வீதி,
தஞ்சை - 613 009

நாளுக்கு நாள் அதிகரிக்க என்ன காரணம்?

! பாலியல் உணர்வுகளைத் தூண்டும் வகையிலும், மனவக்ரங்களை வளர்க்கும் வகையிலும் மீடியா சதாசர்வ காலமும் ஏதேனும் அள்ளி வழங்கிக் கொண்டிருப்பதுதான் காரணம்.



• மறைந்த பண்புகள்

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? சட்டமன்ற உறுப்பினர் அல்லது எம்.பி. சிபாரிசு செய்தால்தான் ரேஷன் கார்டு என்று தமிழக அரசு ஆணையிட்டுள்ளதால் மக்களால் எளிதாக கார்டு பெற முடியாமல் போகிறதே?

! இப்பரிந்துரை கட்டாயமானதுமில்லை; குடும்ப அட்டை பெறுவதற்கான தகுதியும் அல்ல என உணவுத் துறை அமைச்சர் வேலு தெளிவுபடுத்தியிருக்கிறார். அதிகாரிகள் உரிய விசாரணை நடத்தி, திருப்தியான விளக்கங்கள் பெற்ற பின்னரே குடும்ப அட்டைகளை வழங்குவார்கள்.

● ஆண்டனி தமிழரசன், மும்பை - 17

மறைந்த ஷெனாய் இசைக் கலைஞர் பிஸ்மில்லாகான் இஸ்லாமியராக இருந்தபோதும் இசைக் கடவுளான சரஸ்வதியின் பக்தராமே?

! பிஸ்மில்லாகானின் இசையை இனி குறுந்தட்டில்தான் கேட்க முடியும். நேரில் கேட்கின்ற அந்த மெய் சிலிர்ப்பை இனி அவரது ரசிகர்கள் 'மிஸ்' பண்ணுவார்கள். அதைவிட அதிகமாக எல்லோருமே மிஸ் பண்ணக்கூடியது அந்த மேதையின் அடக்கம், தேச பக்தி, சர்வமத சம்மத உணர்வு, எளிமை, மனிதாபிமானம் ஆகியன. 91 வயதில், இறப்பதற்கு முந்தைய தினம்கூட டாக்டர்களுக்குப் பாடிக் காட்டி மகிழ்வித்திருக்கிறாரே!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? தனித் தெலுங்கானா - சாதக - பாதகங்கள் என்னென்ன...?

! ஆந்திர மாநிலத்தில் தெலுங்கானா மிகவும் பிற்படுத்தப்பட்ட பகுதி. அதன் முன்னேற்றத்துக்கு மத்திய - மாநில அரசுகள் தீவிர முயற்சி மேற்கொண்டால், தனி மாநில கோரிக்கை சூடு தணியும். ஆனால் ஒரு சிலருக்குப் பதவி சுகம் கிடைக்கலாம்; ஆனால் முன்னேற்றம் மேலும் தடைபடும் என்பதைத் தெலுங்கானா ஆதரவாளர்கள் உணர்வது நல்லது.

● வி.ஆர். கிருஷ்ணன், தஞ்சை ★

? பொதுநல வழக்கு என்றால் என்ன...?

! சாதாரணமாக, வழக்கு தொடரும் நபர் பிரச்னையில் நேரடி தொடர்புள்ளவராகவோ, பாதிக்கப்பட்டவராகவோ இருக்க வேண்டும். ஆனால், சமுதாயப் பிரச்னை அல்லது பொதுப் பிரச்னை உருவாக்கும் விஷயங்கள் குறித்துத் தொடரப்படும் வழக்குகளில் யார் வேண்டுமானாலும் மனுதாரராக இருக்கலாம். இதைத்தான் பொதுநல வழக்கு என்பார்கள்.

• தெளிவூட்டும் விளக்கம்



● குலசை க.மீ. நஜ்முதீன், காயல்பட்டினம்

? பாலியல் புகாரில் சிக்கிய கேரள அமைச்சர் ஜோசப் பதவி நீக்கம் பற்றி...?

! குற்றச்சாட்டு விசாரணைக்கு உள்ளாகிற காலத்தில் அவர் பதவியில் இருக்கலாகாது என்கிற நோக்கில் பறிக்கப்பட்டுள்ளது, மிகச் சரியே! ○

❑ எஸ்.சந்திரமௌலி

கிரிக்கெட் ஸ்டார் மகேந்திர சிங் தோனி, சென்னைக்கு ஒரு திடீர் விசிட் அடித்தார். பார்க் ஷெரட்டன் ஓட்டலுக்கு, அவர் பிராண்ட் அம்பாசிடராக ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ள மைசூர் சந்தன சோப் நிறுவனத்தின் சார்பில் வந்திருந்தவரிடம் பேசினோம்.

"இன்னும் ஆறு மாதத்தில் பரபரப்பான உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டி நடக்கப்போகிறது. இந்தியாவுக்கு இந்த ஆறு மாதங்களும் சவால்கள் நிறைந்த காலம். ஸ்ரீலங்கா, மலேசியா, தென்னாப்பிரிக்கா என்று அடுத்தடுத்து நாம் ஆட வேண்டிய போட்டிகள் நிறைய இருக்கின்றன. இவை அனைத்தும் இந்திய அணியை உலகக் கோப்பைக்கு நல்ல முறையில் தயார்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. நாம் புதிய வியூகங்களைச் சோதனை செய்து பார்த்து, வெற்றி பெற உகந்த வியூகத்தை வகுத்துக்கொள்ள வேண்டும்" என்றார் தோனி.

'விக்கெட் கீப்பர், ஆட்டக்காரர் என்று இரண்டிலும் பிரகாசிக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தம் உங்களுக்குக் கடினமாக உள்ளதா?' என்றால்,

"இல்லை. நான் கையில் கிளவுஸ் மாட்டிக் கொண்டதும் ஒரு விக்கெட் கீப்பர்; பேட் பிடித்தால் பேட்ஸ்மேன். ஒன்றோடொன்றைப் போட்டுக் குழப்பிக்கொள்ள மாட்டேன். எனவே, இரண்டையும் என்னால் திட்டமிட்டுக்கொள்ள முடிகிறது. இரண்டையும் நான் அனுபவித்து ஆடுகிறேன்" என்றார்.

'கிரிக்கெட் வீரர்களுக்கு அளிக்கப்பட்ட ராணுவ முகாம் பயிற்சி எப்படி இருந்தது?'

"ஆட்டக்காரர்கள் இடையில் குழு மனப்பான்மையினை அதிகரிப்பதற்காகவே அந்தப் பயிற்சி அளிக்கப்பட்டது. மிகவும் கடினமான பயிற்சி என்றாலும், உபயோகமான ஒன்று."

'ஆறாவது, ஏழாவது ஆட்டக்காரராகக் களமிறங்கி ஆடுவதில் வருத்தமா?'

"துளியுமில்லை. ஆறாவதா, ஏழாவதா என்பது பற்றி எனக்குக் கவலை இல்லை. என் ஆட்டத்தில் நான் கவனம் செலுத்தி ஆடுகிறேன். என்னுடைய பெஸ்ட் திறமையினை வெளிப்படுத்துகிறேன்."

'மற்ற கிரிக்கெட்டர்கள் பெப்சி, கோக் என்று பன்னாட்டு குளிர்பான நிறுவனங்களுக்கு மாடலாக இருக்க, நீங்கள் க்ரீம், ஷூ பாலிஷ், சோப் மாடலிங் செய்கிறீர்களே... ஏன்?' என்றால்,

"கிரிக்கெட்டர்கள் கால் வைக்காத புதிய பொருட்களுக்கு மாடலிங் செய்ய விரும்பினேன். மற்றபடி, நான் எதற்கு மாடலிங் செய்யலாம், வேண்டாம் என்பதை என்னுடைய பிசினஸ் மேனேஜர்தான் முடிவு செய்கிறார்" என்றார்.

'சச்சினின் மறு பிரவேசம் பற்றி?'

"ரொம்ப மகிழ்ச்சி. அவரது வருகை, இந்திய அணிக்குப் புத்துணர்ச்சி அளித்துள்ளது. ●



# அடையாளம்!

பேருந்து பயணத்தில் பார்க்க முடிகிற இந்த பரோட்டாக் கடையின் விளம்பரப் பலகையைவிட, தன்னுடைய கடையின் விளம்பரப் பலகையில் வரையப்பட்டிருந்த பரோட்டாக்கள் தத்ரூபமாய் இருந்தன என்பதில் நேவிஸுக்கு எந்தவிதமான சந்தேகமும் கிடையாது. கிரேஏ-ஒன் பரோட்டா ஸ்டால் என்று கடையின் பெயர். வேறு எந்த ஓட்டல்களிலும்-கேரளாவில் தான் வேலை பார்த்த கடைகளிலும் கூட, இந்த அளவு கண்டி இழுக்கும் அசலான பரோட்டாக்களை நேவிஸ் பார்த்ததில்லை. எல்லோருமே வரைந்தவனின் முகவரியை விசாரித்தார்கள். பெருமை தரும் விஷயம்தான். கண்டக்டர் அருகில் வரவும், நேவிஸ் 'டவுன் ஒண்ணு...' என்றான்.

பாளையங்கோட்டை நிறுத்தம் வந்தபோது முன்னால் குங்கும நிறத்தில் பட்டுப் புடைவையணிந்த பெண்ணொருத்தி ஏறினாள். நேவிஸுக்கு மனைவியின் நினைவு வந்துவிட்டது.

அமலியிடமிருந்த மூன்று பட்டுப் புடைவைகளில் குங்கும நிறம்தான் ராசியானது என்பது அவன் எண்ணம். பரோட்டா ஸ்டால் திறந்த அன்று அவள் அதைத்தான் உடுத்தியிருந்தாள். மகள் சிறுமலர் அப்போது பெருமிதத்துடன் கல்லாவில் இருந்தாள். 'அப்பா, இவருக்கு அஞ்சு ரொட்டியும், ஆம்லேட்டுமாம்... எவ்வளவு ஆச்சுப்பா..?' என்றாள்.

எல்.ஐ.சி. தாண்டும்போது பேச்சிமுத்து சைக்கிளில் போவது தெரிந்தது. அனுபவம் உள்ள மாஸ்டர். சால்னா வைத்தார் என்றால் மணம் ஓட்டலையும் தாண்டி தெருவில் போகிறவர்களைக் கூப்பிடும். நேவிஸ் பதினான்கு வயதில் அவரிடம் சில அடி உதைகளைப் பெற்றிருக்கிறான் அல்லது வேலை பார்த்திருக்கிறான். தான் கடை ஆரம்பித்த முதல் நாள் சாயங்காலம் கடைக்கு வந்தார். சால்னாவை ருசி பார்த்தார்; பரோட்டாவைச் சாப்பிட்டார். என்ன சொல்வாரோ என்று பயந்திருந்த நேவிஸிடம் சொல்லாமல், அருகில் இருந்தவரிடம் சொன்னார். 'பயகிட்ட திறமை உண்டு. இப்படியே போட்டா பொழைச்சுக்குவான்...''

வாய்க்கால் பாலம் தாண்டியபோது, ஒருவன் போஸ்டர் ஒட்டிக் கொண்டிருந்தான். மாரியப்பன் மாதிரிதான் இருந்தது. அவன்தான் 'நெல்லை நகரில் ஓர் இனிய உதயம்! ஏ-ஒன் பரோட்டா ஸ்டால். ஆதரவு தாரீர். இவ்விடம் சுவையான பரோட்டாக்கள் கிடைக்கும். ஆர்டரின் பேரிலும் பரோட்டாக்கள் செய்து தரப்படும். உரிமை பி.நேவிஸ்...' போன்ற வாசகங்கள் தாங்கிய சுவரொட்டியை எங்கும் ஒட்டியவன். சமீபத்தில் கூட ஒரு சுவரொட்டி பாதி கிழிந்து, சாயம் எல்லாம் போய், பரிதாபமாக நெல்லை மக்களின் ஆதரவை வேண்டுவதை ராமசாமி கோயில் அருகே நேவிஸ் பார்த்தான்.

முருகன்குறிச்சியைத் தாண்டியதும் தான் வேலை செய்த பழைய ஓட்டலைப் பார்த்தான். இப்போது அங்கு மாஸ்டராக இருப்பவன்கூட தன்னிடம் தொழில் கற்றவன்தான். முதலாளிக்கு நேவிஸை விட மனசே கிடையாது. நேவிஸின் வீச்சு பரோட்டாவுக்கு அங்கே ரசிகர்கள் உண்டு.

டி.வி.எஸ்.ஐ தாண்டியதும் பைக்கில் பேங்க் மேனேஜர் போவதை நேவிஸ் பார்த்தான். கடையின் வியாபாரம் மந்தமாகி, நஷ்ட தினங்களைச் சமாளிக்கவும்,



கரண்ட் பில் கட்டவும் பணத்தைப் புரட்ட அமலியின் நகைகளோடு அவரது பேங்க்குக்கு அவன் போயிருக்கிறான். நகைகள் இன்னும் அங்கேயேதான் இருக்கின்றன.

வண்ணாரப் பேட்டையை நெருங்கும் போது நேவிஸ் ட்ரை சைக்கிளில் ஒருவன் செல்வதைப் பார்த்தான். இதேபோல் ஒரு ட்ரை சைக்கிளை வாடகைக்கு எடுப்பதைப் பற்றி அமலியிடம் பேசிக் கொண்டிருந்தபோதுதான் சிறுமலர் கேட்டான்: "நாம, கடையைக் காலி பண்ணப் போறமா?

"..........."

"ஏன்பா?" குரலில் வருத்தம்!

"சரியா ஓடமாட்டேங்குதும்மா... சேல்ஸ் இல்ல... இதுக்கு மேல தாங்க முடியாது..."

நகரம் தூங்கத் துவங்கியிருந்து இரவுப் பொழுதில் மேஜைகள், இருக்கைகள், பாத்திரங்கள், எஞ்சிய பொருட்கள் எல்லாம் ட்ரை சைக்கிளில் பயணித்தன. முட்டை வியாபாரம் செய்யும் காளி, அன்று ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தான். 'சென்டரான இடம். ஜனங்க வந்து போற இடம். எப்படி ஓடாமப் போச்சுன்னு புரியலியே அண்ணே...' அவன்தான் டவுன் பாய் கடையில் வேலைக்குச் சேர்த்து விட்டவன்.

அடுத்த தினங்களில் டவுனுக்குப் போகும் போது நேவிஸ் மூடிக்கிடந்த கடையைப் பார்த்தான்.

மனதில் இனம்புரியாத வலியை கடையின் இறக்கப்பட்டிருந்த ஷட்டர்கள் தந்தன. பூட்டு தொங்கியது. வெளியே தெரிந்த சுவர்களிலும் போடப்பட்டிருந்த சிமெண்ட் அடுப்பிலும் கரி படர்ந்திருந்தது. தரையின் எண்ணெய்ப் பிசுபிசுப்பை உணர முடிந்தது. 'கடன் அன்பை முறிக்கும்; வரும்போது வாடிக்கையாளராக

**-ஷங்கர்பாபு**

வாருங்கள், செல்லும்போது நண்பராகச் செல்லுங்கள்; கொத்து பரோட்டா, வீச்சு பரோட்டா, ஆம்லெட், ஆஃபாயில், சிக்கன் கொத்து பரோட்டாக்களின் விலைப் பட்டியல்...' வாசகங்கள் பரிதாப மாக விழித்தன. நாய் ஒன்று நகரத்தின் இயக்கத்தை அடுப்பின் அருகே படுத்த வாறு வேடிக்கை பார்த்தது.

எங்கெங்கோ விரைகின்ற வாகனங்கள், மனிதர்கள், அருகிலும் எதிரிலும் உயிர்ப் புடன் கடைகள்... நொடித்துப்போன, மூடப்பட்ட கடை. அந்தக் காட்சி தன் சக்தி முழுவதையும் உணவாகக் கேட் டாலும், தனக்கும் கடைக்குமான தொடர்பு முடிந்து போயிற்று என்பதை நேவிஸால் நம்பவே முடியவில்லை. கடை யும், தன் முதலாளி விடுமுறையில் சென்றி ருக்கிறார்; இப்போது வந்துவிடுவார் என்ற தோற்றத்தைத் தந்து கொண்டிருப்ப தாக அவனுக்குப் பட்டது.

ஏறக்குறைய இரண்டு வருடங்கள் தனது பாதங்களும், குரலும் புழங்கிய கடை. மூன்று வயிறுகளின் பசியைப் போக்கத் தனது வியர்வையைச் சிந்திய கடை.

ஒரு வாரத்தில் அடுப்பை ஒட்டிய சுவர் மீது 'தலைவா, வருக...' போஸ்டர் ஒட்டப்பட்டிருந்தது. தொடர்ந்து பலவித மான சுவரொட்டிகள் கடையின் உட்புறம் வரை ஒட்டப்பட்டன. வாசகங்கள் மறைந்து போயின. இரவு ஒரு பிச்சைக் காரன் படுத்திருந் தான். 'வாடகைக்கு' என்ற அட்டை ஒரு மூலையில் காற்றில் ஆடியது.

அப்போதுகூட, அது தன் கடை என்ற உணர்வு நேவிஸை விட்டுப் போக வில்லை. பஸ்ஸிலும், பிற வாகனங்களிலும் கடையைக் கடக்கிறபோது அது எவ் வளவு கூட்டத்திலும், தன்னை அடை யாளம் கண்டு புன்னகைப்பது போலவே பட்டது. சில நாட்களில் கடையைப் பார்க்கவே கூடாது என்கிற வைராக்கியத் துடன் இருப்பான். கடையை நெருங்கும் போது ஓரக் கண்ணால் பார்த்து வலியை யும், சுகத்தையும் ஒன்றாய் அடைவான்.

ஒருநாள் இரவு அவன் திரும்பும்போது இரண்டு பேர் கம்பிகளால் அடுப்பை இடித்துக்கொண்டிருந்தார்கள்.

பேருந்து வண்ணாரப்பேட்டை யைத் தாண்டியபோது நேவிஸ் அந்தக் கடையைப் பார்த்தான்.

அது ஒரு மொபைல் போன் ஷாப். விதவிதமான செல்போன் படங்கள் கடையின் உள்ளேயும், வெளியிலும் ஒட் டப்பட்டிருந்தன. கண்ணாடிக் கதவின் உள்ளே இளம் பெண்கள் தங்கள் முன் இருந்தவர்களிடம் போன்களைப் பரப்பி விளக்கிக் கொண்டிருந்தார்கள். டை அணிந்த ஒருவன் கடையினுள் நுழைந்து கொண்டிருந்தான்.

அந்த இடத்தில்தான் முன்பு அவனது பரோட் டாக் கடை இருந்தது.



''என்னுன்னா எண்ணெய்யா நிப்பாரு என் புருஷன்...''

''எப்படி?''

''டீவிய போடுங்கன்னா, கர்ச்சீப்பையும் சேர்த்து எடுத்துத் தந்திடுவாரு!''

- திருமயம் பெ.பாண்டியன்

அந்தக் காட்சியை நேவிஸால் நம்பவே முடிய வில்லை. மூடப்பட்ட அவனது பழைய கடைகூட அவனுக்கு இந்த அளவு அதிர்ச்சியையும், கலவரத் தையும் தரவில்லை. கடை தன்னை உலுப்பிக் கொண்டு, சிலிர்த்தெழுந்து வேறு வேடமணிந்து நிற்பதையும், அந்தக் கடை அமைவதற்காகவே அந்த இடம் உருவானது போன்ற பொருத்தத்தையும் அவனால் தாங்கிக்கொள்ளவே முடிய வில்லை. அந்த தினங்களில் அமலிக்கும், சிறுமலருக்கும் அறைகள் விழுந்தன. சர்ச்சில் ஃபாதர் கூட அவனது சோர்வை விசாரித்தார்.

இந்தக் கடையின் பளபள சுவர்களும், தூய தரையும் 'ரெண்டு ஆம்லெட்' குரலையும், எண்ணெய் வாசனையையும் அறியாதவை. இதன் கண்ணாடிக் கதவுகளும், குளிர்ச்சியான காற்றும் தனது முயற்சியின் அங்கீகாரத்தையும், அடையாளத்தையும் புறக்கணித்தவை. இப்போது, தான் முழுவதும் துடைத்தெறியப்பட்டு, உருத்தெரியாமல் சிதைக்கப்பட்டதாக நேவிஸ் உணர்ந்தான். தனது சுவடுகள் எதுவுமே இல்லாத அந்த இடம் அவனுக்குப் பீதியைத் தந்தது.

எல்லாமே கனவு மாதிரி தோன்றியது. 'ஒரு காலத்தில் இந்தக் கடைக்கும், தனக்கும் சம்பந்தம் இருந்தது என்பதைத் தன்னாலேயே நம்ப முடியவில்லையே... எச்சில் இலையாய் தினங்களை விழுங்கும் பெருந்தொட்டியான உலகம் எப்படி பரோட்டாக்களை நினைவில் வைத்திருக்கும்?'

இந்த நேரத்தில் காளி அவனை உயிருட்டினான்.

பக்கத்துப் பலசரக்குக் கடையில் முட்டைகளை அடுக்கிக் கொண்டிருந்த போது ஒருவன் வந்தானாம். 'இங்க ஏ-ஒன்னு பரோட்டாக்கடை இருந்துச்சே... எடுத்துட்டாங்களா? அடடா... ரொட்டி சூப்பராப் போடுவாங்களே...' என்று வருந்தினானாம்.

உடைக்கப்பட்ட முட்டை கச்சிதமான ஆம்ப்லேட்டாக உருமாறியதைப் பார்த்த மாதிரி சந்தோஷம்.

அப்படி சில தருணங்களுக்காக நேவிஸ் காத்திருக்கத் துவங்கினான்.

ஒருநாள் இவனுக்கு முன்னால் சென்ற இரண்டு பேர் "ஏ-ஒன்னு பரோட்டாக் கடை இருந்துச்சு தெரியுமா, அதுக்குப் பக்கத்துல பழக்கடை இருக்கும், நீ அங்க போயி..." இன்னொரு நாள் கல்லூரி மாணவர்கள் "தல, பார்ட்டிய ஏ-ஒன்ல வச்சிருவோம். ரொட்டி சூப்பரா இருக்கும்" என்றார்கள்.

அடுத்த முயற்சி கைகூடும் வரை தாக்குப் பிடிக்க இந்தத் தாற்காலிக மீட்சிகள் உதவும்.

மற்றொருநாள் கல்யாண வீட்டில் ஒருவருடன் பேசியபோது நேவிஸ் தன் கடையைப் பற்றிச் சொன்னான். அவர் 'அட, பலசரக்குக் கடை பக்கத்துல இருக்குமே... நான்கூட அந்தக் கடை பரோட்டா சாப்பிட்டிருக்கேன்... இப்பல்லாம் எவன்ங்க அது மாதிரி போடறான்?"

பசிக்கிற நேரத்தில் காற்றில் மிதந்து வருகிற மசாலா மணம் மாதிரியான சந்தோஷம்.

நேவிஸ் காத்திருக்கத் துவங்கினான். எப்போது வேண்டுமானாலும் தான் அடையாளம் காணப்படலாம்; முயற்சிகள் அங்கீகரிக்கப்படலாம். டவுனில் வேலை முடிந்து திரும்பும் போது மொபைல்போன் ஷாப்பைப் பார்த்தான். அதைக் கடக்கும்போது, அவனருகில் இருந்தவர் முன்னால் இருந்தவரின் தோளைத் தட்டி, போன் ஷாப்பைக் காட்டி "நல்லாப் பாத்துக்கோ... இந்த இடத்துலதான்..." என்று துவங்கினார். நேவிஸின் காதுகள் உயிர் பெற்றன. "முன்னாடி நம்ம மெடிக்கல் ஷாப் இருந்தது!" என்றார் அவர். ○

## இது எங்க பக்கம்

## விபரீதம்!



என் நண்பர் தன் ஆறு வயது மகனுடன் திருமணம் ஒன்றிற்குச் சென்றிருந்தார். அங்கு அவர்களுக்கு குளிர்பானங்களைக் கொடுத்து உபசரித்தனர். ஆர்வமுடன் குடித்த அந்தச் சிறுவன், பாதி பாட்டில் காலியானதும் திடீரென விக்கி, விக்கி அழுதிருக்கிறான்.

நண்பர் பதறிப்போய் என்னவென்று விசாரிக்க, அந்தச் சிறுவன் தன் தொண்டையையும் பாட்டிலையும் மாறி மாறிக் காட்டிச் சொல்ல முடியாமல் அழுதுள்ளான். நண்பரும், மகன் காட்டிய பாட்டிலைக் கூர்ந்து கவனித்தபோது, அதன் வாய்ப் பகுதியில் சிறிய துண்டாக கண்ணாடிப் பெயர்ந்திருந்திருக்கிறது.

உடனே புரிந்துகொண்ட அவர், அவனை விரைவாக ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றுள்ளார். டாக்டரும் விரைந்து செயல்பட்டு சிறுவனின் உயிரைக் காப்பாற்றினாராம். கண்ணாடி பாட்டில் குளிர்பானங்களை உடைத்துக் கொடுப்பவர்கள் கவனமுடன் செயல்பட வேண்டும்.

\- அஜிரா

## ...தான பசுக்களை பாதுகாத்து பராமரிக்கப்படும் பசுமடத்தில் மஹாளய ...ாவாசை நாளில் (22-09-2006) நடைபெறும் முன்னோர் வழிபாட்டிலும், ...ரு தர்ப்பண பூஜையிலும் அனைவரும் கலந்து கொண்டு பித்ரு தேவதைகளின் ...ர்வாதத்தை பெற்று தோஷங்களில் இருந்து நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோம்

...னோர் வழிபாட்டினை தவறாமல் நிறைவேற்றுபவர்களுக்கு அவர்களது முன்னோர்களுடைய பரிபூரண ஆசியும் ஆதரவும் நிச்சயம் உண்டு
...மது முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால் பசுவிற்கு கொடுத்தால் போதும் அது நம் முன்னோர்களுக்கு ...சென்று அடையும். கோதானம் செய்பவர்கள் வாழ்நாளில் வறுமையுறார், மேன்மையடைவர்.
...பிசாச தோஷம் நீங்கி, முன்னோர்களின் அருளாசி பெற பசுக்களுக்கு கோபூஜை செய்து கோமாதாவின் அருளைப் பெறுவோம்!
...முப்பத்து முக்கோடி தேவர்களும், அனைத்து புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ள பசுவிற்கு பூஜை ...செய்வதால் இறைவன் நமக்கு வேண்டிய வரங்களைத் தருவார்.
...கோமாதாவிற்கு அகத்தி கீரை, அருகம் புல் போன்ற உணவு வைப்பதால் மகாலட்சுமி நம் இல்லத்தில் என்றும் ...குடியிருப்பாள். செல்வம் செழித்திருக்கும், சுபகாரியங்கள் நடைபெறும்.
...அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பண்டிகை நாட்கள் முன்னோர்கள் திதி நாட்கள், அன்பிற்குரியவரின் ...நினைவு நாள் என தங்களுக்கு உகந்த நாட்களின்போது கோதானம் செய்து, பசுக்களின் பராமரிப்பிற்கு நன்கொடை ...அளித்து ஸமஸ்த்த தேவதா ஸ்வரூபியான ஸ்ரீ கோமாதா பூஜையால் சகல ஐஸ்வர்யங்களையும் பெறலாம்.
...சு மடத்தில் தினமும் நடைபெறும் கோபூஜையில் அன்பர்கள் நேரில் கலந்து கொண்டு கோமாதாவின் அருளை பெற வேண்டுகிறோம்
...வயது முதிர்ந்த, பால் வற்றிய, ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களை பசுமடத்தில் மற்றும் கிராமங்களில் பாதுகாக்க ...ங்கள் அன்புக்காணிக்கையை கனிவுடன் மனமுவந்து தாரீர்!



### பசு மடத்தில் உள்ள வயதான நோயுற்ற பசுக்களில் ஒரு பசுவை பராமரிக்க



| | | | |
|---|---|---|---|
| ஒரு வாரத்திற்கு ..... | ரூ.105.00 | ஒரு வருடத்திற்கு ..... | ரூ.5400.00 |
| ஒரு மாதத்திற்கு ..... | ரூ.465.00 | கோதானம் ..... | ரூ.9000.00 |
| | | (பசுவும் கன்றும் தானமாக வழங்க) | |

...களை பாதுகாக்க தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஐஸ்வர்ய (பெருமாள்) திருவிளக்கு அனுப்பி வைக்கப்படும்.
- 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, பசுவும், கன்றும் சேர்ந்த (கோமாதா) வெள்ளியிலான விக்ரகம் அனுப்பி வைக்கப்படும்.
- 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு, வெள்ளியிலான வெங்கடேச பெருமாள், பத்மாவதி தாயார் விக்ரகம் அனுப்பி வைக்கப்படும்.
- 5400 - அனுப்பும் அன்பர்களுக்கு, பசுவும் கன்றும் சேர்ந்த (கோமாதா) பித்தளையிலான பெரிய விக்ரகமும், 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை புத்தகமும் (தமிழ்) அனுப்பி வைக்கப்படும்.

...வ பாதுகாக்க மேற்கண்ட நன்கொடையை அனுப்பும் அன்பர்களுக்கு (மஹாளய அமாவாசை அன்று) முன்னோர் வழிபாடு ...மையாக செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். பசுவை பாதுகாக்க ரூபாய் அனுப்பும்போது யாருக்கு திதி செய்ய ...புகிறீர்களோ அவரின் பெயர் திதி மற்றும் கோத்திரம் போன்ற விவரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

...வை (கோமாதாவை) வீட்டில் வளர்ப்போரின் கவனத்திற்கு: உங்களால் பசுவை வீட்டில் பராமரிக்க இயலாவிட்டால் எங்களிடம் ...ரிவிக்கலாம். நாங்கள் நேரில் வந்து பெற்றுக் கொண்டு எங்களது பசு மடத்தில் தினமும் கோபூஜையுடன் இலவசமாக ...மரிப்போம். இது பற்றிய விவரங்களுக்கு செல்: 93400 22233 (பசுக்களை பாதுகாக்க 24 மணி நேரமும் தொடர்பு கொள்ளலாம்).



நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.
தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலமாக Shri Ghosala Seva Trust, Chennai. என்ற பெயரில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

# பசு மடம்

(Recognised by Animal Welfare Board of India)

## பசுக்கள் பாதுகாப்பு இல்லம்

பெருமாளகரம், திருவேற்காடு (P. O), சென்னை - 600 077.
TEL: 2495 9302 Fax: 044 - 4206 6525



## ...பித்ருக்களின் ஆசி பெற மஹாளய அமாவாசை நாளில் கோபூஜை செய்ய அன்புடன் அழைக்கிறோம்.

